

# தமிழக வரலாறு சேரர்கள்

புலவர். கா. கோவிந்தனார்



எழிலகம்

எழிலகம் வெளியீடு : எண்: 15
முதற்பதிப்பு: டிசம்பர் 1992




விலை. ரூ. **30-00**
ISBN - 81 - 85703 - 14 - 0.

வெளியீடு :

**எழிலகம்**
46, செல்வ விநாயகர் கோயில் தெரு
திருவத்திபுரம் (செய்யாறு)
திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்.
604 407.

கிடைக்குமிடம் :

17/12, பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்பு,
இராயப்பேட்டை, சென்னை-600014.



அச்சிட்டோர் :
" கல்பனா " போன் : 304
செய்யாறு. தி. ச. மா. 604 407

# பதிப்புரை

இருபதாம் நூற்றாண்டு தமிழகத்தின் வரலாற்றில் தனக்கென ஒரு சிறப்பிடத்தைப் பெறத்தக்க வகையில் நல்ல தமிழ் அறிஞராக, வரலாற்றுத் திறனாய்வாளராக, செந்தமிழ்ப் பேச்சாளராக, இலக்கியப் படைப்பாளராக, பாதை மாறாத பகுத்தறிவு வாதியாக, அப்பழுக்கற்ற அரசியல் தலைவராக சட்டமன்றப் பேரவைத் தலைவராக என பல்திறன் படைத்த நற்றமிழ்ப் புலவராக விளங்கியவர்,

## புலவர். கா கோவிந்தனார் அவர்கள்

" தமிழுக்கும், தமிழ்ப் புலவர்கட்கும், தமிழ் நாட்டுக்கும் தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்" என்று பேரறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டப் பெற்ற பேறு பெற்றவர். பைந்தமிழ் வல்ல புலவராய் உயர்ந்து, சங்கத் தமிழ் ஏடுகளிலெல்லாம் திளைத்து, வரலாற்றுக் கண் கொண்டு ஆய்ந்து, தொல்காலத் தமிழர் வாழ்வை இக்காலத்தவரும் தெளிந்திடுமாறு தேன் தமிழ்ச் சுவடிகளாக வரைந்து வழங்கிய பெருமை உடையவர்.

## புலவர். கா. கோவிந்தனார் அவர்கள்

புலவர்களுள் பெரும் புலவராய்விளங்கி, திருவண்ணாமலை குன்றக்குடி ஆதீனத்தாரின் " புலவரேறு " பட்டம், தமிழக அரசின் " திரு. வி. க. விருது " மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் " தமிழ்ப் பேரவைச் செம்மல் " பட்டம், போன்ற சிறப்புகளைப் பெற்ற புலவர் அவர்களது தமிழ்ப்பணி பொன்விழா கண்ட பெருமையினையுடையது.

"என் தமிழ்ப் பணி" என்ற தலைப்பில் புலவர் அவர்கள் எழுதிய கட்டுரையில், "என் எழுத்துப்பணி தொடரும். குறள்பற்றி, சங்க இலக்கியங்கள் பற்றி பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்து உள்ளேன். கல்வி கரையில. கற்பவர் நாள் சில காலம் இடம் தந்தால் என் எழுத்துப்பணி தொடரும்" என்று தம் தமிழ்ப்பணியைத் தொடரவேண்டும் என்ற தணியா ஆவலை வெளியிட்டுள்ளார் ஆனால் காலம் இடம் தரத் தவறி விட்டதனால் முற்றுப் பெறாத நிலையிலேயே அவருடைய எழுத்துப்பணி எச்சமாகவே நின்று போயிற்று காலம் செய்த கொடுமை அது.

தமிழால் உயர்ந்து, தம்தமிழ்ப்பணி மூலம் தமிழுக்கும் உயர்வு தேடித்தரும் வகையில், எழுத்துலகம் நினைவு கொள்ளும் வண்ணம் நூற்பணியாற்றிய புலவர் அவர்கள் "செத்தும் பொருள் கொடுத்த சீதக் காதி வள்ளல்" போல தம் மறைவிற்குப் பின்னும் தமிழுக்கு அணி செய்யும் வகையில் பல இலக்கியப் படைப்புகளைத் தம் கையெழுத்து வடிவிலே அளித்துச் சென்றுள்ளார்.

அந்த எழுத்துச் சுவடிகளையெல்லாம் அச்சு வடிவில் வெளியிடுவதைத் தன் தலையாய கடமையாக எழிலகம் ஏற்று அதன் முதற்கட்டமாக, வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி, மனையுறை புறாக்கள் ஆகிய இரு நூல்களை சென்ற ஆண்டு வெளியிட்டோம். சங்க கால அரசர் வரிசை, திருமாவளவன், அறம் உரைத்த அரசர். இலக்கியங் கண்ட காவலர், கலிங்கம் கண்ட காவலர், தமிழர் தளபதிகள், கழுமலப் போர், தமிழர் வாழ்வு, தமிழர் வாணிகம் பண்டைத்தமிழர் போர் நெறி, தமிழகத்தில் கோசர்கள், போன்ற வரலாற்று நூற்கள் பல படைத்த புலவர் அவர்கள், சங்க காலம் தொட்டு இன்றுவரையான தமிழக வரலாற்றை காலம்தோறும் தொகுத்து வரிசையாக எழுதும் பணியில் ஈடுபட்டிருந்தார்கள்.

அந்தப் பணியும் முற்றுப்பெறாது போனது. அந்தப் பணியில் அவர் எழுதி முடித்த வரலாற்றுப் படைப்புகளை தமிழக வரலாறு வரிசை என்ற பெயரில் வெளியிட முனைந்து இரண்டாம் நூலாக தமிழக வரலாறு - கோசர்கள் என்ற இந்த நூலை தமிழ்கூறு நல்லுலகத்தின் முன் படைக்கிறோம்.

"மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே"

என்ற புறநானூற்று மொழிகளுக்கேற்ப, புகழுடம்பு பெற்றுவிட்ட புலவர் பெருந்தகை, இறவாத புகழுடைய இலக்கியங்கள் பலவற்றைத் தமிழன்னைக்கு அணி செய்ய அளித்து விட்டுச்சென்றுள்ளார். புலவர் அவர்களின் முன்னைய படைப்புகளுக்குத் தமிழகத்துப் பெரியோர் களாகிய தாங்கள் காட்டிய பேரன்பையும், பாராட்டையும் ஆதரவினையும் தொடர்ந்து அளித்திட வேண்டுகிறோம்.

"தமிழுக்குத் தொண்டு செய்வார் சாவதில்லை" என்றார் பாவேந்தர். தம் வாழ்நாள் முழுவதும், காலம் கரம் பிடித்து அழைத்துப்போன அந்தக்கடைசி நொடி வரை, தமிழ்ப்பணி ஆற்றிய புலவர் அவர்கள் வாழ்வார்! அவர் தமிழ் உலகிற்கு அளித்துச் சென்றுள்ள இலக்கியச் செல்வங்கள் உள்ளவரை என்றென்றும் நிலைத்து வாழ்வார்! தமிழ் படிப்போர் நெஞ்சமெல்லாம் நிறைந்து வாழ்வார்! என்பது உறுதி.

— **எழிலகம் பதிப்பகத்தார்.**



## குறுக்க விளக்க அகர நிரல்

அகம் : அகநானூறு

ஐங்குறு : ஐங்குறு நூறு

களவழி : களவழி நாற்பது

குறுந் : குறுந்தொகை

சிலம்பு : சிலப்பதிகாரம்

தொல் : தொல் காப்பியம்

நற் : நற்றிணை

புறம் : புறநானூறு

பெரும் பாண் : பெரும்பாணாற்றுப்படை

மதுரை : மதுரைக் காஞ்சி

மலைபடு : மலைபடுகடாம்

EPI : Epigraphic Indica

Ibid : ibidem (in the same place)

P : Page

SII : South indian inscriptions.

# பொருளடக்கம்



## 1. கோசர்க்கும் மோகூர்ப் பழையனுக்கும் உள்ள உறவு பற்றி வரலாற்றுத் திறனாய்வார் கூறும் கருத்துக்கள்

1. நாவலர். ந. மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு ரா வேங்கடாசலம் பிள்ளை ஆகியோரின் கருத்து :

பாகனேரி, த. வை. இளைஞர் தமிழ்ச் சங்க வெளி-யீடாக 1943–ல் வெளியிடப்பட்ட ' அகநானூறு - விளக்க-வுரை ' விளக்கத்தில், அகம் 251–ஆம் பாட்டு உரையில் " வெல்லும் கொடியினையுடைய விரையும் காற்றை ஒத்த அணி செய்யப் பெற்ற தேரினையுடைய கோசர் என்பார், மிக்க தொன்மை வாய்ந்த ஆலமரத்தின் அரிய கிளைகளை யுடைய மன்றத்தே இனிய ஓசையையுடைய முரசம் குறுந்-தடியால் அடிக்கப்பெற்று ஒலிக்க, பகைவரது போர்முனை யை அழித்த காலத்தே, மோகூர் என்பான் பணிந்து வாரா மையின், அவன்பால் பகை ஓரட்டுக் கொண்டவராகிய குதிரைகள் பொருந்திய சேனையினையுடைய புதிய மோரியர் " என உரை கூறிய நாவலர் நாட்டார் அவர்களும் கரந்தைகவியரசு அவர்களும், விளக்கவுரையில், "மோகூர் மன்னன் கோசர்க்குப் பணியாமையினாலே, கோசர்க்குத் துணையாய் வந்த மோரியர் " என்றும் கூறியுள்ளனர்.

2. திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்களுடைய கூற்று :

திருவாளர், ரா. இராகவையங்கார் அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951–ல் வெளியிட்ட, " கோசர் " என்ற தம் நூலில், " மதுரைக் காஞ்சியுள், பழையன் மோகூர் அவையகம் விளங்க, நான் மொழிக் கோசர் தோன்றியன்ன எனக் கூறுதலால், மோகூர் மன்னனாகிய பழையனுக்கும் கோசருக்கும் ஒரு தொடர்-புண்மை புலப்படுவது. இல்லையேல், இவன் மோகூர்

அவையகம் விளங்கும் வண்ணம், இக் கோசர் சமயத்து வந்து தோன்ற வேண்டியதுஇல்லை என்க. இத்தொடர்பு, அவ்வரசற்கும், இக்கோசர்க்கும் உள்ள குடிப்பிறப் பொற்றுமையே ஆம் எனின் நன்கு பொருந்தும் உற்றுழி உதவுவேம் என்று, தம் இனத்தவரான மோகூர் மன்னன் பழையனுக்கு உரைத்த வண்ணம், அவன் அவையகம் விளங்க வந்து தோன்றி உதவியதனையே, இது குறிப்ப தென்பது நன்கு உணரலாம் இவ்வுதவி, மோரியர், தென் திசையில் வடுகரை முன்னுற விட்டுப்படையெடுத்து வந்த போது, மோகூர் அவர்குப் பணியாமல் எதிர்த்து நின்ற நிலையில், அம் மோகூர்க்குத் துணையாக, அவர் ஆம்பலத்துச் சமயத்துத் தோன்றியப் பகைப் படையை சிதைத்த தனையே குறிப்பதென்று " என்றும்; 16 ஆம் பக்கத்தில் " மோரியர் வடுகரை முன்னிட்டுக் கொண்டு தென்திசையில் உள்ள நிலம் உள்ளவரையும் வென்று கொள்ள எண்ணிப் படையெடுத்து வந்தபோது, வந்த போது, மோகூர் அவர்க்குப் பணியாது எதிர்த்து நிற்க, அம் மோகூர் தளராதபடி கோசர், தாம், முன் உற்றுழி உதவுவதாகச் சொல்லிய வண்ணம், அம்மோகூர் ஆலம் பயத்துத் தோன்றிப் பாசறை கொண்டு பகைப்படையைச் சிதைத்தனர். மோகூர் பணியாமல் இருந்தது இயல்பாகிய வீரத்தானும், தம் இனந்தவராகிய கோசர், சமயத்து வந்து உதவுவார் என்ற துணி பாலும் ஆம் " என்றும், " மோகூர்க்கும் கோசர்க்கும் பொதுவான பகைப்படை மோரியர் படையாம் " என்றும் கூறியுள்ளார்.

3 திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கூற்று :

டெல்லி, வாரணாசி, பாட்னா நகரங்களைத்தலைமை இடங்களாகக் கொண்ட, மோதிலால் பானர்ஸிதாஸ் " என்ற நிறுவனம் வெளியீடாக, 1951 ல், திருவாளர். கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்களின், " நந்தர்

மற்றும் மோரியர்களின் காலம்" என்ற வரலாற்று நூல் வெளியிடப்பட்டுள்ளது.

அவ்வரலாற்று நூலின் 254ஆம் பக்கத்தில் திருவாளர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் "வெற்றிக் கொடியுடையவராகிய கோசர், தங்கள் பகைவர்களுக்கு எதிராகப் போர் மேற்கொண்டு, பலரை வெற்றி கொண்டனர்; ஆனால் மோகூர் அவர்களுக்குப் பணிய வில்லை. ஆகவே பெரிய படையுடையவராகிய மோரியர், ஒரு படையெடுப்பை மேற்கொண்டனர்" என்று குறிப்பிட்டுள்ளார்.

அதே நூலின் 255-ம் பக்கத்தில்அவரே, "கோசர்க்குப் பணிய மறுத்த மோகூர்த் தலைவனைப் பணிய வைக்கக், கோசர்க்கும், மோரியர், ஒருமுறை துணை போயினர். இப் படையெடுப்பின் போது வடுகரும் பங்குகொண்டனர் என்று கூறியுள்ளனர்.

திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் தம்முடைய மற்றொரு வரலாற்று நூலான "வரலாற்றுக்கு முந்திய காலம் தொட்டு விசய நகர வீழ்ச்சி வரையான தென்னிந்திய வரலாறு" என்ற ஆங்கில நூலின் 85-ஆம் பக்கத்திலும் அதே கருத்தை மீண்டும் கூறியுள்ளார்.

அந்நூலின் 85-ஆம் பக்கத்தில் அவ்வாறு கூறிய அவர் அதே நூலின் 86-ஆம் பக்கத்தில், "நாம் அறிந்த வகையில் மௌரியர் காலத்துக்குப் பிந்தியதான, சங்க இலக்கியங்களில், "கோசர், மோகூர்த் தலைவனின் நண்பர்கள் ஆனால், அது, நிச்சயமாக, முந்தைய நிகழ்ச்சிகளின் விளைவாக இருத்தல் கூடும்" என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழக வரலாற்று நூல் வரிசையுள் 9-வது ஆக, 1935-ல் வெளிவந்த சோழர்" என்ற

தம் வரலாற்று நூலின் பகுதி I—பக்கம் 27—ல், திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், "கோசர், தென்னாட்டைத் தம் ஆளுகைக்கீழ்க் கொண்டு வரும் முயற்சி மேற்கொண்டனர். மோகூர் மன்னன் அவர்களுக்குப் பணிய மறுக்கவே மோரியர் தம் பெரிய படைகளோடு போர் தொடுத்து வந்தனர் என்று கூறியுள்ளார். தம் கூற்றுக்குச் சான்றாக அகநாநூறு 251-ம் பாடலைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

4. புலவர் கோவிந்தன் கருத்து:

தென் இந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தின் இலக்கியத் திங்கள் ஏடு "செந்தமிழ்ச் செல்வி" 1952–59 ஆண்டு இதழ்களில் நான் எழுதிய கட்டுரையில், ஓரிடத்தில், "தமக்குப் பகையாவார் எனக் கருதியோரை எல்லாம் அழிப்பதையே தொழிலாகக் கொண்ட கோசர், தமக்குப் பணியாது நின்ற மோகூரைத் தாக்கினர்; மோகூர் பணிந்திலது. ஆகவே கோசர்க்குத் துணையாக மோரியர் என்பார் வந்தனர். போரின் முடிவு தெரிந்திலது" என்று கூறிப்பிட்டுள்ளேன்.

பிறிதோரிடத்தில், "பாண்டியன் மறவனாகிய மோகூர்ப் பழையன் என்பானைக் கோசர் தாக்கியதன் முடிவுயாது என்பது அறியப்படவில்லைஎனினும், கோசர், பாண்டிய மன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஏவல்கேட்கும் வீரராய், அவன் அவைக்களத்தின்கண் விளங்கினர் என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது தன் படைத்தலைவனோடு போரிட்ட கோசர், தன் படையில் இருப்பதுதனக்குப்பெருமையும்சிறப்பு அளிக்கும் செயலாகும், என்று கருதி அவ்வாறு கொண்டான் போலும்" என்றும் கருத்து தெரிவித்துள்ளேன் என்பது உண்மை.

இக்கருத்து, சங்கத் தமிழ் நூல்களை முறையாக ஆராய்ந்து 'புலவர் வரிசை' என்ற தலைப்பில் 16 நூல்களையும், 'அரசர் வரிசை' என்ற தலைப்பில் 6 நூல்களையும் வெளியிடுவதற்கு முன்னர்க் கூறப்பட்டது.

கழகம் வெளியிட்ட மேற்படி வரிசையில், 1955 சனவரியில் வெளிவந்த கடைசி நூலாகிய 'திரையன் முதலிய 29 பேர்கள்' என்ற தலைப்பிட்ட நூலின் 109 ஆம் பக்கத்தில் எழுதப்பட்ட, 'கோசர்' என்ற தலைப்புள்ள கட்டுரையில், 113 ஆம் பக்கத்தில் 'வடநாட்டுப் பேரரசுகளுள் மௌரியப் பேரரசும் ஒன்று. அப்பேரரசர் படையொன்று, தமிழகத்தைத் தன்னடிப்படுத்தும் நோக்குடன் தென்னாடு நோக்கி வரலாயிற்று. அவ்வாறு வந்த பெரும்படைக்குத் தமிழகத்தின் வடவெல்லையை அடுத்து வாழ்ந்த வடுகர் என்பார் துணைபுரிந்தனர். வந்த பெரும்படை பழையனுக்குரிய மோகூரை வளைத்துப் போரிட்டது.

பழையனை வென்றாலல்லது, பாண்டி நாடு முதலாம் பேரரசுகளை வீழ்த்த இயலாது என அறிந்த அப்படை, பேராற்றல் காட்டிப் போரிட்டது. அக்காலை, தன் ஊர்க்கண் தங்கியிருந்த பழையன் மாறன், அப்படையின் ஆற்றலைச் சிறுகச் சிறுக அழித்துக்கொண்டே மோகூர்க் கோட்டையுள் அடங்கியிருந்தான். ஆயினும், மோரியர் பெரும்படையைக், கோசர் படைத்துணை இன்றி அழித்தல் பழையனால் இயலாது என அறிந்தான் பாண்டியன். உடனே, தன் கீழ்ப்பணிபுரியும் கோசர் படையை, மோகூர் நோக்கிப்போக விட்டான். தங்கள் படைத்தலைவனையும் தமிழகத்தையும் ஒருங்கே காக்கும் ஒப்பற்ற பணி மேற்கொண்டு, மோகூர் வந்த கோசர்படை தேர்ப்படையோடு கூடிய மோரியர் பெரும்படையை வென்று துரத்திற்று. தமிழகத்திற்கு நேரஇருந்த தாழ்வினைத் தடுத்துப்போக்கினர் கோசர்' எனக் கருத்துத் தெரிவித்துள்ளேன்.

சென்னை அருணா பப்ளிகேஷன்ஸ், 1960 நவம்பர் திங்களில் வெளியிட்ட, 'தமிழகத்தில் கோசர்கள்' என்ற நூலில், பக்கம், 85 ல், 'பழையன் மாறன், பாண்டிநாட்டிலிருந்து வரும் பெரும்படையை எதிர்நோக்கி அரண—கத்தே அடங்கியிருந்தான்' என்றும், பக்கம் 86-ல் 'மோகூர் முற்றுகைச் செய்தியை அறிந்தான் பாண்டியன் நெடுஞ்—செழியன்' என்றும், பக்கம் 87–ல், 'கோசர் படையையே அனுப்புதல் வேண்டும் என அறிந்தான்' என்றும், கோ—சர்கள், உடனே ஒன்று திரண்டு வந்து, தலைநகரில் அணிவகுத்து நிற்கும் தேர்களையும், களிறுகளையும், குதிரைகளையும் பணி கொண்டு, பழையன் மோகூர் நோக்கிப் புறப்பட்டு விட்டனர்' என்றும், பக்கம் 88–ல், 'வடவர் படை, விளைவறியாது. வெருண்டோடத் தொடங்கின. அவ்வாறு வெருண்டோடிய அவரை, விரைந்து வரும் கோசர் படை மடக்கி நிறுத்தி நெடும் போர் புரிந்து நிலையழித்து விட்டது' என்றும், 'பழையனும், அவன் கீழ்ப் பணி புரிந்த கோசர்களும், தமிழகத்திற்கு வடநாட்டுப் பேரரசு மரபினராம் மோரிய மன்னர்களால் வர இருந்த பேரழிவையும் போக்கி, அழியாப் பெரும்புகழ் கொண்டு பீடும் பெருமையும் பெருகப் பெரு—வாழ்வு வாழ்ந்திருந்தனர்' என்றும் எழுதியுள்ளேன்.

## 5. கோவை கிழார் அவர்களின் கருத்து :

'கோவை கிழார்' என அன்போடு அழைக்கப்பெறும் திருவாளர் கோ. மா. இராமச்சந்திரசெட்டியார் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1954–ல் வெளியிட்ட 'கொங்கு நாட்டு வரலாறு' என்ற தம் நூலின் 65–ஆம் பக்கத்தில், 'கோசர்களுக்கு மோகூர் பணியாமையினால் மோரியர் படையெடுத்து வந்தனர்' என்றும், 66–ஆம் பக்கத்தில் 'மோகூர் மீது கோசர்கள் படையெடுத்தார்கள் அவர்கள் வெல்ல முடியாது போகவே, மோரியர்கள்,

மோகூரின் மீது, பின்னர் படையெடுத்து வந்தனர். ஆகவே கோசர்கள், மௌரியர்களுடைய நண்பர்களாக இருக்கலாம்' என்றும் கருத்து அறிவித்துள்ளார்.

6 திரு. என். சுப்பிரமணியன் அவர்களின் கூற்று :

திருவாளர் என். சுப்பிரமணியன் அவர்கள் 1966ல் வெளி-வந்த 'சங்ககால அரசியல்' (Sangam Polity) என்ற தம் நூலின் 16 – ஆம் பக்கத்தில், 'மௌரியர்களின் தென்னாட்டுப் படையெடுப்பு; மற்றும் படையெடுத்து வந்த மௌரியர்க்குத் துணைபுரிந்த கோசர் கையில் மோகூர், தோல்வியுற்றது பற்றிய குறிப்பு உளது[12] என்று கூறியுள்ளார்.

1973–ல் வெளிவந்த கி பி 1565 வரையான தமிழ்நாட்டு வரலாறு, (History of Tamil Nadu up to 1565–A.D) என்றதம் நூலின் 36 ஆம் பக்கத்தில், 'மோகூரைப் பணிய வைக்க, தமிழில் மோரியர் என அழைக்கப்படும். மௌரி-யர்க்குக் கோசர் துணை புரிந்தனர்[13]' என்றும், வடுகர் துணைவர, மோரியர், தமிழகத்தின் வடபகுதியில் படை யெடுத்து நுழைந்தனர்; கோசர்க்குரிய துளு நாட்டிற்குக் கிழக்கில் உள்ளதான மோகூர், மோரியர்க்குப் பணிய மறுத்து விட்டது. மோகூரை வெற்றிகொள்ள மோரியர்க்-கும், வடுகர்க்கும், கோசர் துணைபுரிந்தனர்'[14] என்றும் கருத்தறி வித்துள்ளார்.

7. திரு. எம். ஆரோக்கியசாமி அவர்களின் கூற்று :

திருவாளர். ஆரோக்கியசாமி அவர்கள், 1967–ல் வெளிவந்த, 'தமிழர்கள் இலக்கிய காலம்' (The Classi-cal Age of the Tamils) என்ற தம் நூலின் 35-ஆம் பக்கத் தில், 'படையெடுத்து வந்த மௌரியர்களின் தூசிப் படை

யாக கோசர் வந்ததுபற்றிய புலவர் மாமூலனாரின் குறிப்பு[15] ஈண்டு வலியுறுத்தப் பெறுகிறது'[16] என்றும், 46-ஆம் பக்கத்தில், 'மோகூர்ப் பேரவை, கோசர் இருப்பால் பெருமை பெற்றது என மதுரைக் காஞ்சி[17] நமக்கு அறிவிக்கிறது'[18] என்றும் கூறியுள்ளார்.

8. *திரு. சி. ஈ. இராமச்சந்திரன் அவர்களின் கருத்து :*

சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத்துறைத் தலைவராக விளங்கிய பேராசிரியர் சி ஈ. இராமச்சந்திரன் அவர்கள், 1974-ல் எழுதி, சென்னைப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பட்ட, 'வரலாற்று நிலையில்அகநானூறு (Ahananuru in its Historical setting) என்ற தம் நூலின் 13 ஆம் பக்கத்தில், "அகநானூற்றின் மற்றொரு பாடல் (257) மோகூரை வெற்றி கொள்ள கோசர் தவறியபோது, அவர்களுக்குத் துணையாக வம்ப மோரியர் சேர்ந்து கொண்டனர்"[19] என்றும், பக்கம் 52ல் "அகநானூற்றின் மற்றொரு பாடல் (281), "மோரியர், தென்னாட்டின்மீது படையெடுத்த போது, அவர்களுக்குத் தூசிப்படையாக வடுகர் சென்றனர் எனக் கூறுகிறது. அவ்வாறு தூசிப் படையாகச் சென்ற வடுகர் என்பார் கோசர் ஆதல் வேண்டும், ஆகவே, இவ்வாறு தூசிப்படையாக வந்த கோசர், மோகூரை மோரியர் தாக்கியபோது, அம் மோரியர் ஆணைப்படிதான் செயல்பட்டிருக்க வேண்டும்" என்றும் கூறியுள்ளார்.

திருவாளர் சி.ஈ. இராமச்சந்திரன் அவர்கள், தமிழ் நாட்டுப்பாடநூல் நிறுவனம், 1983ல் வெளியிட்டுள்ள, "தமிழ்நாட்டு வரலாறு" (சங்க காலம்-அரசியல்)"—என்ற நூலில், 'அடிப்படைச் சான்றுகள்" என்ற தலைப்பில் எழுதியுள்ள தம் கட்டுரையின் 10ஆம் பக்கத்தில் "மௌரியர், கோசருடன் சேர்ந்து கொண்டு மோகூர்ச் சிற்றரசனான

பழையன் என்பவனைத் தாக்கினார். அவன் அவர்களைப் புறங்கண்டு துரத்தினான். கோசருக்குத் துணைபுரிய மகதத்தினின்று ஒரு புதுப்படை வந்தது'' என்றும் கூறியுள்ளார்.

9. டாக்டர் கே. கே. பிள்ளை அவர்களின் கருத்து.

சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறைத் தலைவராக விளங்கிய டாக்டர் கே. கே. பிள்ளை அவர்கள், 1961ல் வெளியிடப்பட்ட "டாக்டர். ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களின் வெள்ளி விழா மலரில் (Dr. R, P. Sethu Pillai Silver Jubilee Commemoration Volume-1961) எழுதிய 'தமிழகமும் மோரியர் படையெடுப்பும்" என்ற தலைப்பிட்ட கட்டுரையில். "வடுகர் முன்வர, அவரைத் தொடர்ந்து தென்திசை நோக்கி மோரியர் படையெடுத்து வந்தனர். கோசர், தம் அண்மையிலிருந்த நாடுகளை அடக்க முயன்றனர்; அம் முயற்சியை மோகூர் தலைவன் பழையன் தடுத்தான்; அவனை அடக்கும் பொருட்டுக், கோசர் மோரியரது உதவியை நாடவே, மோரியர், தம்தேர்களுடன் மலைகளைக் கடந்து வந்தனர்' [21] என்று கூறியுள்ளார்.

10. திரு. பொன். சுப்பிரமணியம் அவர்களின் கருத்து.

தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1983ல் வெளியிட்ட "தமிழ் நாட்டு வரலாறு: சங்க காலம்—அரசியல்'' என்ற நூலில், "காலக்கணிப்பு'' எனத் தலைப்பிட்டு கட்டுரை எழுதியுள்ள, வரலாற்று விரிவுரையாளர் திரு. பொன். சுப்பிரமணியம் அவர்கள், அந்நூலின் 120ஆம் பக்கத்தில் "கோசர்கள், மோகூரைத் தாக்கியபோது, மோகூர் அரசன் பணியாமையால், அவனை வெல்ல முடியாமல், கோசர்கள் மோரியரின் துணையை நாடினார். மோரியர்கள் வம்ப

வடுகர் துணையுடன் தமிழகத்தில் நுழைந்து தாக்கினர் எனக் கூறியுள்ளார்.

### 11. டாக்டர். அ. கிருட்டிணசாமி அவர்களின் கூற்று :

தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் 1983-ல் வெளியிட்ட, 'தமிழ் நாட்டு வரலாறு சங்க காலம்—அரசியல்' என்ற நூலில், 'கொங்கர்' பற்றிய வரலாற்றினை எழுதியிருக்கும், தமிழ் நாட்டு வரலாற்று வெளியீட்டகப் பதிப்பாசிரியர் திருவாளர் டாக்டர். அ. கிருட்டிணசாமி அவர்கள், அந்நூலின் 411-ஆம் பக்கத்தில், 'மோரியருடைய சேனையில் தூசிப்படையாகக் கோசர் என்ற படை வீரர்களும் இருந்தனர். மோரியரும், கோசரும் சேர்ந்து கொங்கு நாட்டுப் பழையனுடைய அரண் மிகுந்த மோகூர் என்ற கோட்டையை முற்றுகையிட்டனர்; ஆனால், மோகூர்ப் பழையன், முற்றுகையிட்ட வடவடுகர், கோசர், முதலியோர் அடங்கியசேனைகளை முறியடித்துக் கொங்கு நாட்டை விட்டுத் துரத்தி விட்டான் தோற்றோடிய மோரியப் படைத்தலைவன் மீண்டும் பெரும்படையொன்றை அனுப்பும் படி பாடலிபுரத்திற்குச் செய்தி அனுப்பினான். மகத நாட்டிலிருந்து பெரும் படையொன்று தமிழகம் நோக்கி வந்தது' எனக் கூறியுள்ளார்.

மோரியர், மோகூர் மன்னன் பழையன் மாறன்,கோசர் ஆகியோர் வரலாறு உணர, எனக்கும் மேலே கூறிய தமிழ்ப் பேராசிரியர்கள், வரலாற்றுப்பேராசிரியர்களுக்கும் துணை நிற்பன, கீழ் வரும் பாடல் வரிகளே :

1, பழையன் மோகூர் அவையகம் விளங்க,
நான் மொழிக் கோசர் தோன்றியன்ன'

—மதுரைக்காஞ்சி : 508-509

2. ‘பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும் பெயர் மாறன் தலைவனாகக்
கடந்தடுவாய்வாள் இளம்பல் கோசர்
இயல்நெறி மரபின் நின் வாய்மொழி கேட்ப’

—மதுரைக் காஞ்சி : 771-774

இவை இரண்டும், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனை, அவன் அவைக்களப் புலவர் மாங்குடி மருதனார் பாடியன.

3. ‘பறைபடப் பணிலம் ஆர்ப்ப, இறை கொண்டி
தொன் மூதாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயாகின்று’

—குறுந்தொகை - 15 : ஔவையார்

4. ‘வெல்கொடித்

துனைகால் அன்ன புனைதேர்க் கோசர்
தொன் மூதாலத்து அரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசம் கடிப்பிகுத்து இரங்கத்
தெம்முனை சிதைத்த ஞான்றை, மோகூர்
பணியாமையின் பகைதலை வந்த
மாகெழுதானை வம்ப மோரியர்
புனைதேர் நேமி உருளிய குறைத்த
இலங்கு வெள் அருவிய அறைவாய்’

—அகம் : 251; மாமூலனார்

5. முரண்மிகு வடுகர் முன்னுற, மோரியர்
தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு

விண்ணுற ஓங்கிய பனி இருங் குன்றத்து
ஒண்கதிர்த் திகிரி உருளிய குறைத்த அறை'
—அகம் 281 : மாமூலனார்

6. 'விண் பொரு நெடுவரை இயல் தேர் மோரியர்
பொன் புனை திகரி திரி தரக் குறைத்த அறை'
—அகம் : 69; உமட்டூர் கிழார் மகனார்
பரங்கொற்றனார்

7. 'வென்வேல்,
விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர்
மோரியர்
திண்கதிர்த் திகிரி திரி தரக் குறைத்த
உலக இடைகழி அறைவாய்'
—புறம் : 175; கள்ளில் ஆத்திரையனார்

தலையாளங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் அவையில், பழையன் மாறன் தலைமையில், அவன் ஏவல் கேட்கும் படைவீரர்களாக விளங்கிய கோசர், அவர்களின் சேவை, பாண்டி நாட்டில் இனித் தேவையில்லை என்ற நிலை ஏற்பட்ட போது, அவர்களின் தலைவனாம் பழையன் மாறனின் கோட்டை நகராம் மோகூர் சென்று, அவன் அவைக்குப் புகழ்சேர வாழ்ந்திருந்தனர்.

மோகூர்க் கோட்டையின் நடுவிடத்தே வளர்ந்து பல் லாண்டு காலமாகக் காக்கப்பட்டு நிழல்தந்து நிற்கும் பெரிய ஆலமரத்து அடியாம் ஊர் மன்றத்தில், முரசுகள் முழங்க, வலம்புரிச் சங்குகள் ஒலிக்க நாலூர்க் கோசர் களும் ஒன்று திரண்டு வந்தமர்ந்து தம்முன் வந்து வேண்டி நிற்பார்க்கு வழங்கும் வாக்குறுதிகளை, வாய்மை தவறாது நிறைவேற்றி வைத்தனர். அதனால் நாட்டவரெல்லாம், 'வாய்மொழிக் கோசர்' என வாயாரப் பாராட்ட, பெரு வாழ்வு வாழ்ந்திருந்தனர்.

கோசகர்ளும், அவர்கள் தலைவனாகிய பழையன் மாறனும், யாராலும் வெற்றிகொள்ள மாட்டாப் பேராண்மை உடையவராக விளங்குவது கண்ட வடநாட்டு அரசர்கள் முதற்கண் மோகூர்ப் பழையனை வெற்றி கொண்டால் அல்லது, தமிழகத்துள் நுழைய முடியாது என்பதை உணர்ந்திருந்தனர். அதனால், அவ்வடநாட்டரசர்கள் திரண்டுவந்து மோகூரைத் தாக்கினர்.

அத்தாக்குதல் நிகழ்ந்த அக்கணமே, மோகூர் அரண் நடுவகத்தே நிற்கும் ஆலமரத்தடியில் பாடிகொண்டிருந்த கோசபடை, தேர்படையோடு, அரண் புறத்தே சேர்ந்து வடபுலத்து அரசரை முறியடித்து துரத்திவிட்டு மோகூர்க் கோட்டையைக் காத்தனர்.

மோகூர்க் கோட்டை பணியாது போகவே, வந்த வடநாட்டரசர், மோகூரைப் பணியவைக்க வேண்டுமாயின் வடபேரரசாம், மோரியரின் தேர்ப்படை தென்னாடுநோக்கி வந்தாக வேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர், மோரியர்க்கு அழைப்பு சென்றது. மோரியர் தேர்படை தென்னாடு நோக்கிப் புறப்பட்டது. புறப்பட்ட மோரியர், தமிழகத்துள் தாம் மட்டும் நுழைவது கூடாது: அது, இயலவும் இயலாது. தமிழ் நாட்டின் வட எல்லைக் கண் உள்ள, பலம் மிக்க வடுகர் துணையும் தேவை என்பதை உணர்ந்தனர். வடுகரும் அதற்கு இசைந்தனர்.

வடுகர் தூசிப்படையாக, முன்னே அணி வகுத்துச் செல்ல, பின் தொடர்ந்து வந்த மோரியரின் தேர்ப்படைகள் தமிழகத்தின் வடவெல்லைக்கண் நிற்கும் மலைத் தொடரால் தடுத்து நிறுத்தப்பட்டன. உடனே, அத்தேர்கள், எளிதே உருண்டோடுவதற்கு ஏற்ப, அம்மலையிடையே பாறைகள் உடைக்கப்பட்டு வழி அமைக்கப் பட்டது.

மேலே எடுத்து வைத்த பாக்கள் அனைத்தையும்[21] ஒருங்கு வைத்து நோக்கியவழி, நாம் அறியலாம் வரலாற்றுச் செய்தி இவ்வளவே.

மோரியர், தேர்ப்படை தடையின்றி வர,மலைப்பாறைகளை உடைத்துச் செய்த வழியாக' மோரியர் தமிழகத்துள் நுழைந்தனரா? அவர் முடிவு என்ன ஆயிற்று என்பதுபற்றியோ, மோகூர் அரணை அழிக்க முனைந்த வடநாட்டு அரசர்களை முறியடித்துத் தமிழகத்துக்கு, வடநாட்டவரால் நேர இருந்த கேட்டினை இல்லாமல் செய்துவிட்ட கோசர்களும், அவர்கள் தலைவன் மோகூர்ப் பழையனும் அதன் பின்னர் என்ன ஆனார்கள் என்பது பற்றியோ சங்க இலக்கியம் ஏதும் கூறவில்லை.

திருவாளர். ரா. இராகவையங்கார், அடியேன், தவிர்த்த ஏனைய தமிழ்ப்பேராசிரியர்களும் வரலாற்றுப் பேராசிரியர்களும் மாமூலனாரின் அகம் 251; 281 பாக்கள் அளவிலேயே தங்கள் வரலாற்றுத் திறனாய்வினை வரையறுத்துக் கொண்டனர்; 'செந்தமிழ்ச் செல்வி'[22] இதழ் 457ம் பக்கத்தில் 1952-53ல் 'கோசர்' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில், அடியேனும் அத்தவறுக்கு உள்ளானவன்; 1955ல் திருத்திக்கொண்டேன்.

ஏனைய திறனாய்வாளர்களும், மாங்குடி மருதனாரின் மதுரைக் காஞ்சியில் வரும்,

'பழையன் மோகூர் அவையகம் விளங்க
நான் மொழிக்கோசர் தோன்றியன்ன'[23]
'பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும் பெயர் மாறன் தலைவனாகக்
கடந்தடு வாய்வாள் இளம்பல் கோசர்
இயல் நெறி மரபின் நின் வாய்மொழி கேட்ப'[24]

என்ற இவ்வரிகளைக் கருத்தில் கொண்டிருந்தால்மோகூர் மன்னன் பழையன் மாறன், கோசர்களின் தலைவனே அல்லது, பகைவன் அல்லன் என்பதையும். கோசர், தங்கள் தலைவன் தலைநகராம் மோகூரைக் காக்கத் துணை போயிருப்பரே அல்லது, அம் மோகூரை அழிக்க, அம் மோகூர் மன்னனை வெற்றி கொள்ள முனைந்தார்க்குத் துணை போயிருக்க மாட்டார்; துணைபோக வில்லை என்பதையும் உணர்ந்திருப்பர்.

வரலாற்றுத் திறனாய்வார், தாம் எடுத்துக் கொண்ட பொருள்குறித்த அனைத்து அகச்சான்றுகளையும் அரிதின் முயன்று தேடிக் காணுதல் வேண்டும். பரந்து கிடக்கும் சங்க இலக்கியத்தில், ஒரு சில வரிகளைக் கருத்தில் கொள்ளாவிடின், வரலாற்று நிகழ்ச்சிகள் எந்த அளவு தலைகீழாகிப் போய் விடும் என்பதற்கு இஃதொரு நல்ல எடுத்துக்காட்டு.

# சான்றெண் விளக்கம்

1. மதுரைக் காஞ்சி, வரிகள் 508,509
2. ரா. இராகவையங்கார், கோசர்'1951, பக்-15
3. K.A. Nilakanta Sastri Age of the Nandas and Mouri yas, Motilal Banaridas Publications, 1951.
4. "That Kosar of the Victorious banner, started operations against their foes and gained Victories against several; but as Mohur did not submit to them, the Mouriyas, who had a large Army, led an expedition.'
5. "At least on one occasion, the Mauryas went to the assistance of the Kosar. to enable them to subdue the rebellious Chieftain of Mohur; The Vadugar took a hand in this expedition."
6. ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழக வெளியீடு, 1955'
   A History of South India – From Pre-Historic times to the fall of Vijayanagar' – P-85
7. மேலது – In Sangam Literature. the bulk of which belongs,as we shall see,to thepost-Mauryan epoch, the Kosar are friends with the Chief of Mohur; But that might very well have been the direct result of earlier occurances"-P-86
8. பக்-457.

   காவிரி – கட்டுரைத் தொகுதி, 1990, பக்-153
9. வரிகள் 771–774.

10. செந்தமிழ் செல்வி, 1952–53, பக் 458
காவிரி–கட்டுரைத் தொகுதி–1990 பக்–153

8. "The Cholas"–Vol I, University of Madras, 1935-P-27. "The Kosar undertook the subjugation of the South and that; as the Mohur Chriettain Gontinued defiant, the Mawryas came down with their great forcrs, on a war like expedition to the South,'

9. பக்கம்-457,
காவிரி–கட்டுரைத் தொகுதி-1990-பக் 154

10. வரிகள் 771–774

11. செந்தமிழ்ச் செல்வி. 1952-53-பக் 458
காவிரி கட்டுரைத் தொகுதி - 1990-பக் 154

12. The reference in Tamil Literature to a Mow yan invasion of the South and Mohur s defeat at the hands of the Koser, who helped the invading Mawryas:'—Sangam Polity -P–16

13. 'The Kosars helped the Mawryas (called Moriyar in Tamil) to subdue Mohur' — N. Subramanyam–History of Tamilnadu.
(up to 1565 A.D) p-36.

14. The Moriyas helped by the Vadugars invaded the northern borders of Tamil Nadu, and Mohur' a principality to the east of the Tulu Country of the Cosars, refused to submit to them, and the Kosars assisted the Moriyas and the Vadugars to conquer Mohur'-Ibid—P-36.

15. அகம் - பாடல் 251

16. 'The reference by poet Mamulanar to the Kosar as the Vanguard of the invading Mauriyar is pressed into service here'

– M. Arokyasami, The classical age of the Tamils, p-35

17. வரிகள் - 508–509

18. 'The MaduraiKanchi tells us, that the assembly of Mohur was indeed honoured by the presence of Kosars'–Ibid–p-46

19. 'Another Stanz in the Ahananuru (267) mentions that when Kosar failed against Mohur, they were joined by the Vamba Moriyar as the New Mauryas'– Dr. C. E. Ramachandran, :Ahananuru in its Historical Settings; p-13

20. 'In another stanze in the Ahananuru (281) It is stated that the Vadugar formed the Vanguard, when the Moriyas came southwards with the intention of conquering the lands, The Vadugar who formed the Vanguard of Moriyars, should have been Kosar The Kosar, who thus formed the Vanguard were there fore only acting on the orders of the Moriyar, when they attacked Mohur'-Ibid-p-52.

21. அகம்–251, 281, 69; புறம்: 75; குருந்தொகை 15; மதுரைக் காஞ்சி : 508-509, 771-772.

22. செந்தமிழ் செல்வி: 1952, பக்-453.

23. வரிகள் - 508-509.

24. வரிகள் : 771-774.

# 2. மோகூர் யாண்டுளது?

சங்க இலக்கியப் பாடல்களில் பழையன் மாறனின் தலைநகராக கூறப்படும் மோகூர் யாண்டுள்ளது என்பதை ஆராய்ந்த வரலாற்று நூலாசிரியர்களிடையே ஒத்த கருத்து இல்லை,

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு தொகுத்து, தமிழ் வளர்ச்சி இயக்ககத்திற்காக தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் 1983ல் வெளியிட்ட "தமிழ் நாட்டு வரலாறு-சங்ககாலம்-அரசியல்' என்ற நூலில் ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ள வரலாற்று ஆய்வாளர்களிடையே கூட மோகூர் யாண்டுளது என்பதில் ஒத்த கருத்து காணப்படவில்லை.

'தமிழ்நாட்டு வரலாறு : சங்ககாலம்-அரசியல்' நூலில் 'அடிப்படைச் சான்றுகள்-1' என்ற தலைப்பில் கட்டுரை எழுதியுள்ள டாக்டர் சி. ஈ. இராமச்சந்திரன் அவர்கள் 'மோகூர்' கொங்கு நாட்டில் உள்ளதாக குறிப்பிட்டு உள்ளார்.[1]

அதே நூலில் 'கொங்கர்' என்ற தலைப்பிட்ட கட்டுரை எழுதியுள்ள, அந்நூலின் பதிப்பாசிரியர். டாக்டர் அ. கிருட்டிணசாமி அவர்கள் 'கொங்கு நாட்டுச் சேலம் மாவட்டத்து நாமக்கல்லிற்குத் தெற்கில் காவியிரின் வட கரையில் மோகனூர் என்னும் ஊர் இருக்கிறது. இதன் பழைய பெயராகிய மோகூர், இப்பொழுது மோகனூர் எனத்திரிந்து வழங்குகிறது'[2] எனக் கருத்தறிவித்துள்ளார்.

மற்றொரு ஆய்வாளரான, உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இணைப் பேராசிரியராக விளங்கிய டாக்டர். க. த. திருநாவுக்கரசு அவர்கள்; 'குறுநில மன்னர்கள்' என்ற தலைப்பில் எழுதியுள்ள தம் கட்டுரையில் 'சேலம் மாவட்டத்தில், நாமக்கல்லில் இருந்து 14 கி. மீ. தொலைவில், காவிரியின் தெற்குக் கரையில் மோகனூர் என்னும் ஊர் இருக்கிறது. இந்த ஊரைச் சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய மோகூராக அறிஞர் கருதுகின்றனர்[3]' என்று குறித்துள்ளார்.

மோகூர் கொங்கு நாட்டில் உள்ள ஒரு இடம் என்ற கருத்தை மேற்சொன்ன ஆய்வாளர்கள் குறிப்பிட்டிருக்கும் அதே 'தமிழ்நாட்டு வரலாறு சங்க காலம்–அரசியல்' என்ற நூலில் 'சேரர்; சோழர்' ,பாண்டியர் இலங்கையில்' தமிழர் என நான்கு தலைப்புகளில் கட்டுரைகள் எழுதியுள்ள ஆராய்ச்சிப் பேரறிஞர் திருவாளர் மயிலைசீனி வேங்கடசாமி அவர்கள் ஓரிடத்திற்கு மூன்று இடங்களில் பாண்டிநாட்டில், மதுரைக்கு அருகில் உள்ள மோகூர் தான், பழையன் மாறனுக்கு உரிய மோகூர் எனக்கூறியுள்ளார்.[4]

'சேரர்' என்ற தலைப்பிட்ட கட்டுரையில் 'இது (மோகூர்) பாண்டிய நாட்டில் இருந்த ஒரு ஊராகும்' என்றும், 'பாண்டியன்' என்ற தலைப்பிட்ட் தம் கட்டுரையில் 'மதுரைக்கு அருகில் மோகூர் இருந்தது. பிற்காலத்தில் இது 108 வைணவத் திருப்பதிகளில் ஒன்றாகத் திருமோகூர் எனப்பெயர் பெற்றது' எனவும், 'இலங்கையில் தமிழர்' என்ற மற்றொரு கட்டுரையில் 'பழையன் மாறன் என்னும் குடிப்பெயருள்ளவர் பாண்டியர்களுக்குச் சேனைத் தலைவராக இருந்தார்கள். அவர்கள் மதுரைக்கு அருகில் உள்ள மோகூரில் வாழ்ந்து வந்தனர்' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள் தம்முடைய 'கோசர்' (ஓர் சிற்றாராய்ச்சி) என்ற நூலில் 'இம் மோகூரும் அதனை அடுத்து ஆலம்பலமும், கள்ளக் குறிச்சிச் சேகரத்து இன்றும் முள்ளனவாதல் நோக்கிக் கொள்க மோரியர் குறைத்த குன்றத்து அறைவாய் கள்ளக்குறிச்சி மலையிடை வழியாகும்; அல்லது செங்கண் மராஅத்து அமைவாய் வழியாகுமென்க. இவ்வூரே செங்குட்டுவன் பொருது வென்றதா மென்பதும், கோசர் வந்து தவியதாகு மென்பதும் குட்டுவன் அஞ்சூர், கோசர் பாடி என்னும் ஊர்கள் இம் மோகூர்ப் பக்கத்துண்மையான் உய்த்துணரலாம். மோகூரை அடுத்துள்ள ஆலம்பலம் என்ற சிற்றூரே கோசர் தோன்றிய மூதாலத்துப் பொதியிலாகு மென்க. பொதியில் அம்பல மென்பது தமிழ் வழக்கு' என்று மோகூர் யாதுளது என்பது குறித்து தம் கருத்தைக்குறிப்பிட்டுள்ளார்.[5]

அடியேன் (புலவர் கோவிந்தன்) 1960 எழுதிய 'தமிழகத்தில் கோசர்கள்' என்ற நூலில் 'தென்னார்காடு மாவட்டத்தில். கள்ளக்குறிச்சியை அடுத்த மலை நாட்டின் அகத்தே விளங்கும் மோகூர்"[6] என்றும், 'அவன் (பாண்டியன்), அக்கோசர் குடியிருப்புகளை அம் மோகூர்க்கு அணித்தாகவே ஆக்கி அளித்தான்: அவ்வாறு அவன் அளிக்கக் கோசர் வாழ்ந்த கோநகர்கள், ஆலம்பலம், கோசர்பாடி, எனும் பெயர்களொடு கள்ளக்குறிச்சியை அடுத்து இன்றும் இருந்து காட்சி அளிக்கின்றன'[7] என்றும் கூறியுள்ளேன்.

இவ்வாராக, மோகூர் யாண்டுளது என்பது குறித்து பல்வேறு கருத்துக்கள் ஆய்வாளர்களிடையே நிலவி வருகிறது. மோகூர் யாண்டுளது என்ற கேள்விக்கு விடைகாண வேண்டின் அக்காலத்திய வேந்தர்களும், வேளிர்களும், குறுநில மன்னர்களும், மறவர்களும் ஆகிய

தமிழக வரலாற்றுத் தலைவர்கள், அவர்களைப் பாடிய புலவர்கள் அப் புலவர்கள் பாடிய பாக்கள் அளிக்கும் செய் திகள் ஆகியவற்றை ஆராய்தல் இன்றியமையாதது,

சேர மன்னன் செங்குட்டுவனை பாடியவர் பரணர்: அப் பரணரால் பாடப்பெற்ற சோழ அரசர்கள் மூவர்; சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி[8], கரிகால் பெருவளத்தான்[9], வேல் பஃறடக்கை பெருவிறற்கிள்ளி[10] ஆகியோரே அம் மூவர் ஆவர்.

செங்குட்டுவன் மோகூர் மன்னனை வென்றான். அம் மோகூர் பணியாமையால் மோரியர்வந்தனர். அம் மோகூர் பாண்டி நாட்டு மோகூர் என்ற ஊராயின், அம் மோரியர், முதற்கண், அப் பாண்டி நாட்டின் வடக்கில் உள்ளதான சோழ நாட்டைக் கடந்தே வந்திருக்க வேண்டும். அப் போது சோழநாட்டு அரியணையில் அமர்ந்திருந்த, மேலே கூறிய மூவரில் யாரேனும் ஒருவரை வெற்றி கொண் டிருக்க வேண்டும்.

கோசர் வரலாறு அறியத் துணைபுரியும் சங்கப் பாடல் களில் பெரும் பகுதியைப் பாடியவர் பரணர். கோசர்களை, அவர்கள் தலைவன் பழையன் மாறன், அவன் தலைநகர் மோகூர், அவன் காவல்மரம் வேம்பு; அவன் பால் தோல்வி கண்ட அறுகை, அதனால், அவன் செங்குட்டுவனால் பெற்ற அழிவு ஆகியவற்றை அறிந்து அறிவித்திருக்கும் பரணர், அம் மோகூர் பாண்டி நாட்டில் இருந்து,மோரியர் அம்மோகூர் வரை வந்திருப்பராயின்,அவர்கள் தமிழகத்து வடவெல்லைக்குள் நுழைந்து, வேங்கடத்தை அடுத்திருக் கும் தொண்டைநாட்டவரை, அத்தொண்டைநாட்டிற்குத் தெற்கில் உள்ளதான சோழநாட்டை அப்போது ஆண்டி ருந்தவர்களை வெற்றி கொண்டதைப் பாடியிருப்பர். ஆனால், அவை குறிதது அவர் ஏதும் கூறினாரல்லர்.

சோழர்களில் மூவர், சேரர்களில் இருவர், பாண்டியரில் ஒருவர், வள்ளல்களில் நால்வர். அதியமான் போலும் குறுநிலத் தலைவர்கள், ஆட்டனத்தி போலும் மறவர்கள் 26 பேர்கள், ஆக 36 பேர்களையும், சோழ நாட்டுக் காவிரி, சேரநாட்டுப் பேரியாறு, போலும் ஆறுகளையும் இமயம், எழில், நவிரம்; கொல்லி, பறம்பு பொதியில், வேங்கை முதலாம் மலைகளையும், அரிமண வாயில் முதல் வெண்ணிவரை 27 ஊர்களையும் அறிந்து கூறியிருக்கும் பரணர், மோகூர் படை சோணாட்டைக் கடந்து வந்திருந்தால், அதைத் தம் பாட்டில் எங்கேனும் குறிப்பிடாதிருக்க மாட்டார். மிகப் பெரிய நிகழ்ச்சி; ஆகவே, விரிவாகவே கூறியிருப்பர். ஆனால், அது குறித்து ஒரு வரி கூட இல்லை ஆகவே, மோரியர், சோழ நாட்டைக் கடந்திருக்கவும் இல்லை அவர் எதிர்த்த மோகூர். சோழ நாட்டிற்குத் தெற்கில் உள்ளதான பாண்டி நாட்டு மோகூராக இருத்தலும் அறவே இயலாது.

மோகூர் கொங்கு நாட்டைச் சேர்ந்தது என்பதையே வரலாற்றுச் செய்திகள் உறுதி செய்கின்றன. வடநாட்டுப் பேரரசன் ஒருவன் தென்னாடு வந்ததும், தென்னாட்டுப் பேரரசன் ஒருவன் வடநாடு சென்றதும் ஆகிய செய்திகள் இதையே உறுதி செய்கின்றன.

சந்திரகுப்த மௌரியப் பேரரசன், அரச வாழ்வை வெறுத்து துறவறம் மேற்கொண்டு ஆசிரியர் பத்திரபாகுவோடும், தன்னொத்த மாணவர்கள் பன்னீராயிரவரோடும் பாடலி விடுத்து மகிஷ நாடு என்றும் எருமைநாடு என்றும் பண்டு அழைக்கப் பெற்ற இன்றைய கன்னட மாநிலம் சரவணபெல்கோலா வந்து தங்கினான் என்பது வரலாறு.

'கி. மு, நான்காம் நூற்றாண்டின் இறுதியில் சந்திரகுப்தன், துறவறம் பூண்டு பத்திரபாகுவின் மாணவனாகி

தன்னொத்த மாணவர் பன்னீராயிரவரும், மைசூர் மாநிலத்தில் உள்ள சரவண பெல்கோலாவுக்கு வந்து சேர்ந்தான்' என்று திருவாளர் பி.டி, சீனிவாச அய்யங்கார் அவர்கள் கூறியுள்ளார்.

'மோரியனான சத்திரகுப்தன், மகிஷமண்டலத்து சிரவணவேள்குளத்து வந்து தங்கியது அப்பக்கத்துச் சாசனங்களானும பழைய சரிதங்களானும் கேட்கப் படுதலான்' என்பது திருவாளர் ரா. இராகவ அய்யங்கார் அவர்களின் கூற்று,[12]

அதேபோல், கண்ணகி சிலைக்கான கல் எடுக்க இமயம் சென்ற செங்குட்டுவன் சேரநாட்டிலிருந்து வழிப் பயணம் தொடங்கிய இடம் நீலகிரி என்று கூறுகிறது சிலப்பதிகாரம்[13]

''நீலகிரியை விட்டு நீங்குகின்றான் செங்குட்டுவன்: அடுத்தகணமே கங்கைக் கரையில் காணப்படுகின்றான். திரும்பும்போதும் அதேநிலை; அவ்வகையில் செங்குட்டுவன் கடந்து சென்றிருக்க வேண்டிய, தக்கணம், விந்திய மலைச்சாரல் கங்கைப் பெருவழிகளின் இயற்கைக் காட்சிகளை விளக்கிக் கூறும் ஒரு பொன்னான வாய்ப்பினை ஆசிரியர் கை நழுவ விட்டுள்ளார்'[14] என்று பி.டி, சீனிவாச அய்யங்கார் கூறுவதையும் நினைவில் கொள்ள வேண்டும்,

ஆக, செங்குட்டுவன் நீலகிரியிலிருந்து, கங்கைக்கரையை அடைந்தான் என்றால், அவனும் கொங்கு நாட்டைக் கடந்தே சென்றிருக்க வேண்டும். இவற்றையெல்லாம் வைத்து நோக்கிய வழி, மோரியரும், அவ்வழியில் தான் தமிழ்நாடு வந்திருக்க வேண்டும், ஆகவே, பழையன் மாறனுக்கு உரிய மோகூர், கொங்கு நாட்டில் உள்ளது. என்பது உறுதியாகிறது.

இன்னொரு வகையாலும் இது உறுதி செய்யப்படும் பழையன் மாறன் படைமறவர் கோசர்; அக் கோசர் வாழ்ந்த இடங்களாகக் கீழ்க்கரையைச் சேர்ந்த செல்லூர், நியமம் என்பன கூறப்படுமேனும், அவர்களுக்கு உரிய நாடு துளுநாடு என்கிறது அகநானூறு, மங்களூரை நடு விடமாகக் கொண்ட நாடே துளுநாடு என்பது வரலாற்றாசிரியர் முடிவு.

ஆக இவ் வகையில் நோக்கினும், மோகூர், கொங்கு நாட்டகத்ததே என்பது உறுதி செய்யப்படும்.

# சான்றெண் விளக்கம்

1. 'மோகூர் (கொங்கு நாடு)–பக்–10
2. பக்-408
3. பக்கம்–471
4. பக்–169; 251, 625-26
5. கோசர், அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1951-பக் 16-17
6. பக்-81
7. பக்-91
8. புறம்-4
9. அகம்-125, 246, 376
10. புறம்-66
11. **P.T.** Srinivasa Iyengar–'History of the Tamils' Page 141-142

    புலவர் கா. கோவிந்தன் 'தமிழர் வரலாறு'-பகுதி-2 பக்-478.

In the last quarter of the IV Century B. C., Chandragupta became a jain ascetic and one of

12000 desciples of Brhadrabahu, he trudged on foot along with his Master and follow desciples to Saravanabelgola in Mysore province',

12. கோசர், 1951, பக்-17.

13, 'ஆலும்புரவி, அணித்தேர்த்தானையொடு நீலகிரியின் நெடும்புறத்து இறுத்து'—சிலம்பு: 26, கால் கோள் 84-85.

14. P.T. Srinivasa Iyengar, 'History of the Tamils' p–594.

புலவர் கா. கோவிந்தன், 'தமிழ் வரலாறு' 1989, பக்கம்–2, பக். 395-396,

15. அகம் 15 - 'கோசர் துளு நாடு' என்ற வரிகளைக் காண்க.

## 3. மோரியரின் படையெடுப்பிற்குச் சான்று கூறும் சங்கப் பாடல்கள் ஐந்தும் தென்னாட்டுப் படையெடுப்பைக் குறிப்பிடுவனதாமா?

மோரியரின் படையெடுப்பிற்குச் சான்று கூறும் சங்கப் பாடல்கள் ஐந்து; அவை வருமாறு :

> 'பறைபடப் பணிலம் ஆர்ப்ப, இறை கொண்டி
> தொன் மூதாலத்துப் பொதியில் தோன்றிய
> நாலூர்க் கோசர்'
>
> — குறுந்தொகை;பாடல் 15

> "வெல் கொடித்
> துனை காலன்ன புனைதேர்க் கோசர்
> தொன்மூதாலத்து அரும்பணைப் பொதியில்
> இன்னிசை முரசம் கடிப்பிகுத்து இரங்கத்
> தெம்முனை சிதைத்த ஞான்றை, மோகூர்
> பணியாமையின் பகைதலை வந்த
> மாகெழுதானை வம்ப மோரியர்
> புனைதேர் நேமி உருளிய குறைத்த
> இலங்கு வெள்ளருவிய அறை'
>
> — அகநானூறு : பாடல் 251[2]

> "முரண்மிகு வடுகர் முன்னுற, மோரியர்
> தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு
> விண்ணுற ஓங்கிய பனி இருங் குன்றத்து
> ஒண் கதிர்த் திகரி உருளிய குறைத்த
> அறை'
>
> — அகநானூறு : பாடல் 281[3],

"விண்பொருநெடுவரை இயல்தேர் மோரியர்
பொன் புனை திகரி திரிதரக் குறைத்த
அறை"

— அகநானூறு : பாடல் : 69[4]

"வென் வேல்,
விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
தின் கதிர்த்திகிரி திரிதரக் குறைத்த
உலக இடைகழி அறைவாய் நிலை இய
மலர்வாய் மண்டிலம்'

— புறநானூறு : பாடல் 175 :[5]

இவற்றுள், குறுந்தொகை 15ஆம் பாடலில், 'தொன் மூதாலத்துப் பொதியிலும்', கோசரும் குறிப்பிடப் பட்டுள்ளனர். அகநானூற்று 251 ஆம் பாடலில் கோசரும்' தொன்மூதாலத்துப் பொதியிலும், தெம்முனையும், மோகூரும், மோரியரும்,[7] குறிப்பிடப்பட்டுள்ளனர். அகநானூற்று 281ஆம் பாடலில்; வடுகர் முன்னுர வத்த மோரியரும், தென் திசை மாதிரமும். குறிப்பிடப்பட்டுள்ளனர். ஆகவே இம் மூன்று பாடல்களும், மோரியரின் தென்னாட்டுப் படையெடுப்பைக் குறிப்பிடுகின்றன என்பதில் ஐயம் இல்லை.

அகநானூற்று 69ஆம் பாடலும், புறநானூற்று 175ஆம் பாட்டும், மோரியரின் படையெடுப்பைக் குறிப்பிடுகின்றன. என்பதில் ஐயம் இல்லை:அவ்விரு பாடல்களிலும் 'மோரியர்' குறிப்பிடப்பட்டுள்ளது அதை உறுதி செய்கிறது ஆனால், அவை மோரியரின் தென்னாட்டுப் படையெடுப்பைக் குறிப்பிடுகின்றன எனக் கூறுவது இயலாது! முந்தைய மூன்று பாடல்களிலும்[6], கோசர், வடுகர், மோகூர், தென்திசை, போலும், தென்னாட்டுப் படையெடுப்பைத் தெளிவாக உறுதி செய்யும் சொற்றொடர்கள்

இடம் பெற்றிருப்பது போலும் சொல் எதுவும், இவ்விரு பாடல்களில்[7] இடம் பெறவில்லை.

கி.மு. முதலாம் நூற்றாண்டில், தமிழ் நாடாண்ட சோழப் பேரரசன் கரிகாலன், தமிழ்நாடு முழுவதையும் தன் ஆணைக் கீழ் கொண்டு வந்தும், மனநிறைவு கொள்ளா னாய், மேலும் போரே விரும்பிய நிலையில், தன்னை எதிர்ப்போர், தமிழகத்தில் யாரும் இன்மை அறிந்து, நல்ல நாளில். வாள், குடை, முரசு முதலாயவற்றை முன்னே போக விட்டு, 'என் வலி கெழு தோளின் பெருமையை இம் மண்ணக மருங்கில், என் நண்ணார்' பெறுக என வஞ்சினம் கூறி வடநாடு சென்றான். சென்றானை, இமயம் இடை நின்று தடுத்து விட்டது, அதனால் சினங் கொண்ட, சோழர் குலக் குரிசில், அம் மலையின் முடியில்' தன் குலச்சின்னமாம் புலி பொறித்து மீண்டான் என்கிறது சிலப்பதிகாரம்[8],

> "செரு வெங் காதலின் திருமாவளவன்
> வாளும், குடையும் மயிர்க்கண் முரசும்
> நாளொடு பெயர்த்து நண்ணார் பெறுக! " இம்
> மண்ணக மருங்கின் என் வலிகெழு தோள்" எனப்
> புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்
> அசைவில் ஊக்கத்து நசை பிறக்கு ஒழியப்
> பகை விலக்கியது; இப் பயங்கெழுமலை என
> இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக்
> கொடுவரி ஒற்றிக் கொள்கையிற் பெயர்வோன்.
>
> —சிலம்பு : 5 : 90-98

கரிகாலன் இமயப் படையெடுப்பு உண்மையான வரலாற்று நிகழ்ச்சியே என்பதைக் 'கலைமகள்' திங்கள் இதழில்[9] திருவாளர். மு. இராகவ அய்யங்கார் அவர்கள் எழுதியுள்ள ஆய்வுக் கட்டுரையும் உறுதி செய்கிறது. ஆங்கு அவர் கூறியிருப்பதாவது;

'இமயப் படையெடுப்பு, சோழன் தலைமையின் கீழ்த் தமிழரசரால் ஒரு காலத்து நிகழ்ந்தது என்ற வரலாற்றைப் புதியதாகத் தெரியவரும் அரிய செய்தி ஒன்றும் ஆதரித்து நிற்பதை இனிக் கூறுவேன். மேலே நான் கூறியவற்றை யெல்லாம் ஒரு சேரக்கொண்டு நோக்குமிடத்து, திருமாவளவன் சென்று வந்த இமயமலை இப்போது சிக்கிம், பூட்டான் என்ற இராஜ்யங்களுக்கு இடையில் உள்ள மலைப்பகுதியே யாதல் வேண்டும். என்னெனில் இப்பகுதியில் தான், வங்காளத்து டார்ஜிலிங்கிலிருந்து தீபெத்துக்குச் செல்லும் கணவாய்கள் உள்ளன. இக்கணவாய்களில் சில முற்காலத்தும், இக்காலத்தும் வியாபாரப் போக்குவரத்துக்கு உரியனவாய் அமைந்தனவாகும்.

இவைகளும், பல மாதங்கள் வரை பனி மூடப்பெற்று அடைபட்டுக் கிடத்தலால், சில காலங்களே, அப்போக்குவரத்துக்கு ஏற்பன வாகின்றன...வங்காள மாகாணத்தில் அடங்கி உள்ள வச்சிர, மகத நாடுகளுக்கு வெகு தூரமில்லாததாய், இமயத்தைக் கடந்து செல்வதற்கு ஏற்ல வழியுடைய பிரதேசங்களுள், ஸிக்கிம், பூட்டான்களுக்கு இடையில் உள்ள கணவாய்களே சிறந்தவை. ஸிக்கிம் ராஜ்யத்துக்குக் கிழக்கே, அதற்கும் தீபெத்துக்கும் உள்ள எல்லையை வரையறுத்து நிற்கும் மலைத்தொடரானது செங்குத்தாய் ஆகாயத்தை அளாவிக்கொண்டு பெருங் கோட்டை மதில் போல் நீண்டு செல்கிறது.

இம் மலைத் தொடரை அடுத்துச் செல்லும் கணவாய், சமுத்திர மட்டத்துக்கு மேல் 14500 அடி உயரமுடையதாய் தீபெத் பிரதேசமாகியஓம்பிப் பள்ளத்தாக்கிற்குக் கொண்டு போய் விடக்கூடியது, இம் மலைக்கும், இதனை அடுத்த கணவாய்க்கும் வழங்கும் பெயர்கள் கவனிக்கத் தக்கன சோழ மலைத் தொடர் **(Chola Range)** சோழர் கணவாய் **(Chola pass)** என்பன அவற்றிற்கு இன்றும் வழங்கிவரும் நாமங்களாகும்.[10]

மேற் கூறியவற்றைக் கொண்டு நோக்குமிடத்து இமயப் பகுதியொன்றிற்கு வழங்கும் இப்பெயர், சோழன் தொடர்பு பற்றி வந்ததாகக் கூடாதோ என்பதே என் ஆராய்ச்சி. இம்மலையடியாகவே, இதனையடுத்துள்ள கணவாயுப் அப்பெயர் பெற்றதாக வேண்டும். 'சோல' (Chola) என்பதற்கு ஸிக்கிம், தீபெத் பாஷைகளில் வேறு பொருள் இருப்பதாகத் தெரியவில்லை. 'லா' என்பதற்குத் தீபெத் பாஷையில் கணவாய் என்ற பொருள் உண்டு. 'நது–லா' (Natu-la), 'ஜெலப்–லா' (Jalap-la) எனக் காண்க,

ஆனால், 'சோல' (Chola) என்பது அவ்வாறு இரு சொல்லுடையதன்றி, ஒரு சொல்லாகவே மலைக்கு வழங்கி வருவதும், அச்சொற்கு வேறு பொருள் காணாமையும் நோக்கத் தக்கன.

அதனால் திருமாவளவன், அப்பிரதேசத்தைக் கைப் பற்றி ஆண்டுள்ள மலைச் சிகரத்தில் தன் புலிப் பொறியை நாட்டி, அங்கே தன் ஆணையை நிறுவிய கால முதலா, அம்மலை அவ்வாறு பெயர் பெற்றது போலும் என்று கருத இடம் தருகிறது இமயத்துக் கப்பாலும், அவ்வளவன் செல்லக் கருதியிருந்ததை அம்மலை தடுத்து விட்டதாக இளங்கோவடிகள் குறிப்பிட்டதற்கு, மேற்குறித்தபடி அச் சோழன் சென்ற காலத்தே பனியால் முழுதும் மூடப்பட்டு அக் கணவாய் அடைபட்டிருந்தது என்பதே கருத்துப் போலும்.'

அண்மைக் காலத்தில் இந்தியப் பெருநாட்டின் முதல் தலைமை அமைச்சராம் பெருமை பெற்ற, பாரத ரத்னம் ஜவகர்லால் நேரு அவர்கள் காலத்தில் (1962) இந்தியா வுக்கும், சீனாவுக்கும் இடையில் மூண்ட போரில், இந்தியா இழந்து விட்ட சில லட்சம் சதுர மைல்களைக் கொண்ட

இந்திய மண், இந்தப் பகுதியைச் சேர்ந்ததுதான் என்பது வரலாற்று உண்மை.

கடக்கலாகாது எனக் கூறப் பெறும் இமயப் பெரு மலை மீண்டும் கடக்கப் பட்டது. அண்மைக் காலத்தும் கடக்கப் பட்டது என்பதை உறுதி செய்ய வல்லன மேலே எடுத்து வைத்த இரு வரலாற்று நிகழ்ச்சிகளும்.

மோரியர் தென்னாட்டின் மீது படைதொடுத்து வருவதற்கு முன்னர் இந்தியாவின் வடவெல்லைக்கு அப்பாற் பட்ட இந்தியாவின் வடவெல்லையாம் இமயப் பெரு மலைக்கு அப்பால், வடமேற்கில் உள்ள ஆப்கானிஸ்தானையும் வடக்கிழக்கில் உள்ள நேபாளம் முதலாம் நாடுகளையும் கைப்பற்றி ஆண்டனர் என்பது வரலாற்று உண்மை.

அவ்வகையில் நேபாளத்தைக் கைப்பற்றிக் கொள்ள இமயப் பெருமலையை, வடகிழக்குப் பகுதி கணவாய் வழியாக மோரியர் கடந்து சென்ற படையெடுப்பைக் குறிப்பனவே, உமட்டூர் கிழார் மகனார் பரங் கொற்றனார் பாடிய அகநானூற்றுப் பாட்டும்,” கள்ளில் ஆத்திரையனார் பாடிய புறநானூற்று பாட்டும்,[12] என்பதே பொருந்துவதாகும்,

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951ல் வெளியிட்ட ‘கோசர்’ என்ற ஒரு சிற்றாராய்ச்சி நூலில் திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள்.[13]

‘இம்மோரியர் வடநாட்டுப் படையெடுத்தபோது இமையத்து வழியை உண்டாக்கியது. ‘வென்வேல்......மலர்வாய் மண்டிலம்’[14] என்னும் புறப்பாட்டானறியக் கிடப்பது........ புறப்பாட்டின் மோரியர் வடக்கட் குறைத்த உலக இடை

கழியாகிய அறை வாயிற், சூரிய மண்டலம் எம்போதும் ஒரு பெற்றியாய நிலையும் என்பதனான் அது வேறாதல் நன்கு தெளியலாம் புறப்பாட்டுரைகாரரும் இந்நிகழ்ச்சி வடக்கண் வெள்ளி மலைக்கப்பால் வைத்துக் கூறுதல் காண்க',[15] எனக் கூறியிருப்பதும், இப் பாடல்கள்[16] குறிப்பன, மோரியரின் தென்னாட்டுப் படையெடுப்பை அன்று - மாறாக, அம் மோரியரின் வடநாட்டுப் படையெடுப்பையே, என்பதை உறுதி செய்வது காண்க.

# சான்றெண் விளக்கம்

1. ஔவையார்.
2. மாமூலனார்,
3. மாமூலனார்.
4. உமட்டூர் கிழார் மகனார் பரங் கொற்றனர்.
5. கள்ளில் ஆத்திரையனார்.
6. குறுந்-15, அகம்-251, 281
7. அகம்-69, புறம்-175
8. சிலம்பு-5 : 90–98
9. கலைமகள், 1932 : பகுதி 1 : பக்கம்–62-63
10. a) Imperial gazateer of India , Sikkim, Vol ; 10 - Page 327, Vol. 22:Page-365
    b) Hand gazateer of India ; Chola Pass
    c) Britannica ; Sikkim ; Vol.;P-667; Vol. 20, p–640.
11. பாடல்–69
12. பாடல்–175
13. கோசர், 1951–பக்–17

14. புறம்-175

15. 'திகரி திரதரக் குறைத்த' என்றோதி, சக்கரவாளத் திற்கு அப்பாற்பட்ட உலகத்து மோரியர் திகரி ஊடறுத்துச் சேறலிற் குறைத்த பிளவுபட்ட வாயிற்கு அப்பாலாகிய உதயகிரிக் கண் நிலைபெற்ற ஆதித்த மண்டலமென்று உரைப்பாரும் உளா' என்பது அந்த உரை.

16. அகம்–69, புறம்-175

# 4. கோசரும், பொலம்பூண் கிள்ளியும்

பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் புகழ்பாடும் பாடல்களுள் ஒன்று மதுரைக் காஞ்சி. அதன் ஆசிரியர் மாங்குடி மருதனார். அப்பாண்டியன் புகழ் பாடும் பிறிதொருநெடும்பாட்டு நெடுநல்வாடை அதன் ஆசிரியர் நக்கீரர். அப்பாண்டியனின் சம காலத்தவரான இவ்விரு பெரும்புலவர்களும் தம்பாடல் வரிகளில் 'கோசர்' குறித்துச்சில அகச்சான்றுகளை அளித்துள்ளனர்

1. "பழையன் மோகூர் அவையகம் விளங்க
நான் மொழிக் கோசர் தோன்றியன்ன"

—மாங்குடி மருதனார்; மதுரைக்காஞ்சி : 507-508

2. "பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும் பெயர் மாறன் தலைவனாகக்
கடந்தடு வாய்வாள் இளம்பல் கோசர்
இயல்நெறி மரபின்நின் வாய்மொழி கேட்ப"

—மாங்குடி மருதனார்: மதுரைக் காஞ்சி : 771-774

3. "வாய்மொழி நிலைஇய சேண் விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி,
நிலங்கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி,
பூவிரி நெடுங்கழி நாப்பண் பெரும் பெயர்க்
காவிரிப் படப்பைப் பட்டினம் அன்ன
கெழு நகர்"

—நக்கீரர்; அகநானூறு; 205

4. ',நெடு நகர்
இழையணி யானைப் பழையன் மாறன்
மாடம்மலி மறுகின் கூடல் ஆங்கண்
வெள்ளத் தானையொடு வேறுண்டு புலத்து இறுத்த
கிள்ளி வளவன் நல்லமர் சாஅய்க்
கடும்பரிப் புரவியொடு களிறுபல வெளவி
ஏதில் மன்னர் ஊர் கொளக்
கோதை மார்பன் உவகையிற் பெரிதே''

—நக்கீரர்; அகநானூறு : 306

இவ் விருபெரும் புலவர்கள் அளிக்கும், மேலே கூறிய அகச் சான்றுகள் மூலம் பெறலாகும் கோசர் பற்றிய வரலாறு கீழ்வருமாறு :

'மோகூர் என்ற கோட்டை நகருக்கு உரியவன் பழையன். அவன் அரசவைக்குப் பெருமை சேர்த்தனர் கோசர் படை மறவர்; பெரும் புகழ்மிக்க அம் மோகூர்ப் பழையன் பாண்டியர் குடிப்பெயர் குறிக்கும். 'மாறன்' என்ற சிறப்புப் பெயரைத் தன் பெயரோடு இணைத்துக் கொண்டு 'பழையன் மாறன்' எனவும் அழைக்கப்பட்டான். அப் பழையன் மாறனைப் படைத் தலைவனாகக் கொண்ட கோசர் படை, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் கீழ்ப் பணிபுரியும் பல்வேறு படை அணிகளில், ஒரு அணியாகப், பணிபுரிந்து வந்தது. பாண்டியர் தலைநகராம் கூடல் மா நகரின் காவல் பொறுப்பு, பழையன் தலைமையில் இயங்கிய கோசர் படையிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது.

அந்நிலையில், 'பொலம் பூண் கிள்ளி' எனவும், 'கிள்ளி வளவன்' எனவும் அழைக்கப்பெறும், சோழ அரசன் ஒருவன பாண்டியர் நிலத்தை உடைமையாக்கிக் கொள்ள விரும்பினான்; தன் விருப்பம் நிறைவேற வேண்

டுமானால்' முதற்கண், பழையன் மாறன் தலைமையில் பணிபுரியும், கோசர் படையை அழித்தாக வேண்டும் என்பதை உணர்ந்தான்.

விரைந்து பாயும் குதிரைப் படை, களிற்றுப் படைகளைக் கொண்ட பெரும் படையோடு வந்து, கூடல் மா நகரைத் தாக்கினான். ஆனால், கோசர் படைத்தலைவன் பழையன் மாறன், தன் தேர்ப்படை, யானைப் படைகளோடு சென்று' கூடல் மாநகருக்கு அணித்தாக, அச் சோழனை வென்று. அவன் கொண்டு வந்த குதிரைப்படை களிற்றுப் படைகளைக் கவர்ந்து கொண்டதோடு, சோழனுடையவும், அவனுக்குத் துணைவந்த பிற அரசர்களுடையவுமான, பல ஊர்களைக் கவர்ந்து கொண்டான். பழையன் மாறனிடம், சோழன் பெற்ற இப்பெருந்தோல்வி அறிந்து அச் சோழர் குலப் பகைவனாகிய, சேரர் குலக் கோக் கோதை மார்பன் மகிழ்ச்சி அடைந்தான்.' இவ்வளவே.

இனி, கோசர்க்கும், பொலம் பூண் கிள்ளிக்கும் உள்ளுறவு பற்றி, வரலாற்றாய்வாளர்கள் கொண்டுள்ள கருத்தினைக் காண்போம்.

1. அடியேன (புலவர். கா. கோவிந்தன்) கருத்து :

அ) சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்ட 'சங்கால அரசர் வரிசை' என்ற வரிசையில், ஆறாவது வரிசையாக, 1955ல் வெளிவந்த, 'திரையன் முதலிய 29 பேர்கள்' என்ற தலைப்புள்ள என் நூலில், கோசர் பற்றிய சிறு வரலாற்றுக் குறிப்பில்,

'கோசர், பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் படையாளராகிப் பணி புரிவாரா

யினர். பாண்டியர் படையில் பணியாற்றும் கோசர்க்கு, மோகூர்க்கு உரியோனும் பழையன் என அழைக்கப் பெறு வோனும் ஆகிய மாறன் என்பான் படைத் தலைவனாய் விளங்கினான். பழையன் மாறன், பாண்டியர் படைத் தலைவனாய்க் கோசர் பெரும் படையோடு, பாண்டியர் தலைநகராம் கூடல் மாநகரைக் காத்திருந்த காலை, வெள்ளம் போல் பரந்திருந்த பெரும்படையுடைய கிள்ளி வளவன், கோசர் படையைக் கொன்று கூடல் மாநகரைக் கைக் கொள்வான் வேண்டிக் கூடலை வளைத்து நின்று பெரும் போர் புரியத் தொடங்கினான்.

அது கண்டு கடுஞ் சினம் கொண்ட பழையன் மாறன், கோசர் படை துணை செய்ய, தன் களிற்றுப் படையோடும் புறம் போந்து கிள்ளி வளவனை வளைத்துப் போரிட்டான். பாண்டியர் பெரும் படையை எதிர்த்து நிற்கும் ஆற்றல் இழந்து தோற்றான், கிள்ளிவளவன். அவனுக்கு உரிய களிறுகளையும், குதிரைகளையும் கணக்கில கைப்பற்றிக் கொண்டான், கோசர் படைத் தலைவன் பழையன். அம் மட்டோடு அமையாது பாண்டி நாட்டை அடுத்திருந்த அக் கிள்ளிக்குரிய நல்ல ஊர்கள் பலவற்றையும் சோழர் பகைவன் சேரன் சிரிக்குமாறு கைப்பற்றிக் கொண்டான்" எனக் கூறித், தொடக்கத்தில் எடுத்தாண்ட நான்கு பாடல் வரிகளையும்[1] அகச் சான்றுகளாகக் காட்டி யுள்ளேன்.[2]

ஆ) சென்னை, அருணா பப்ளிகேஷன்ஸ், 1960 நவம்பரில் வெளியிட்ட, 'தமிழகத்தில் கோசர்கள்' என்ற என் நூலில் 'கோசர் படை, கூடன் மாநகரைக் காத்து நிற்பதை அறியாத பாண்டியன் பகைவர் எழுவரும், தம் எழுபெரும் படையோடும் போந்து பாண்டி நாட்டுத் தலைநகரை வளைத்துக் கொண்டனர். அது கண்ட பாண்டியர் படையும் களம் நோக்கிப் புறப்பட்டு விட்டது.

களம் வந்து சேர்ந்த பாண்டியர் படையைக் கண்ணுற்ற பகைவர்கள். அப் பாண்டிப் படைக்கு நடுவே, கோசர் படை பழையன் கீழ் அணிவகுத்து நிற்பதைக் கண்டு வியந்து கலக்க முற்றனர். வாள் வேல் முதலாம் படைக் கலங்கள் ஒளி வீச உரம்மிக்கு நிற்கும் அக் கோசர் படையையே முதற்கண் வெற்றி கொள்ளுதல் வேண்டும். ஆனால், அக் கோசர் படையை எதிர்த்துப் போரிடுவது தம்முள் எல்லார்க்கும் இயலாது. வெள்ளம் போல் பரந்த பெரும் படையும் நனி மிகச் சேய பகை நாடுகளுக் கெல்லாம் சென்று போரிட்டு வென்ற போர்ப் பயிற்சியும், காற்றெனக் கடுகிப் பாயவல்ல குதிரைப்படையும், கணக்கற்ற களிற்றுப் படையும் உடையார் மட்டுமே அப்படைமுன் செல்லுதல் இயலும் என உணர்ந்து தம் எழுவருள் அத் தகுதி முற்றவும் வாய்க்கப் பெற்றவன் கிள்ளிவளவன் ஒருவன் மட்டுமே எனத் தேர்ந்து கோசரோடு போரிடும் பணியினை அவன்பால் ஒப்படைத்தனர்.[3]

கோசரோடு போரிடும் பெருவாய்ப்புத் தனக்குக் கிடைத்ததே என்ற மகிழ்ச்சியால், கிள்ளியும் தன் நாற்படையைக் கோசரின் அணி மீது ஏவினான். வந்திருந்த பகைவர் படை ஏழனுள்ளும் அளவாலும், ஆற்றலாலும் பெரியது கிள்ளியின் படை, அப்படையோடு போரிடுவதே தம் பேராண்மைக்குப் பெருமையாகும், அவ் வாய்ப்பினை அளிக்க மாட்டானா பாண்டி மன்னன் என எண்ணியிருக்கும் நிலையில், வெள்ளம்போல் பரந்த கிள்ளிப்படை தம் படை வரிசை நோக்கி வருவது கண்டு மகிழ்ந்தார்கள், கோச வீரர்களும் அது தனக்குக் கிடைத்த பெறற்கரிய பேறு எனக் கருதி பெருமிதம் கொண்டான் பழையன் உள்ளத்தில் அவ்வுணர்வு மிகவே கோசர் உரம் மிகுந்து போராடினர், அதனால் போராடத் தொடங்கிய சிறிது பொழுதிற் கெல்லாம் சோணாட்டுப் படையை வென்று துரத்தி விட்டார்கள் கோசர்.

கோசர் படையைக்கொன்று நெடுஞ்செழியன் நாட்டை அகப்படுத்திக் கொள்ளலாம் என்ற நினைவோடு வந்த கிள்ளி தன் நாற்படையை நான்மாடற் கூடற் போர்க் களத்தே விடுத்து, தன் நாடு நோக்கி ஓடத் தலைப்பட்டான் கிள்ளி களத்தே விட்டுச்சென்ற கணக்கற்ற களிறுகளையும் குதிரைகளையும் கைப்பற்றிக்கொண்ட பழையன், அவ் வெற்றியோடும் அமைதி கொள்ளாது தோற்றோடும் கிள்ளியைத் துரத்திச் சென்று பாண்டி நாட்டு எல்லைக் கண் உள்ள சோணாட்டின் பெரும் பகுதியைப் பாண்டியர் உடைமையாக்கி மீண்டான்.[4]

கிள்ளியின் பகைவனாம் கோக்கோதை மார்பன் பார்த்துப் பரிகசிக்குமாறு அவனைப் பெருந் தோல்வியுறப் பண்ணிய பழையன் மாறன் பேராண்மையினையும், அவனுக்குத் துணையாய், அவன் கீழ்ப் பணிபுரிந்த கோச வீரர்களின் வாட்போர் வன்மையினையும் தம் அகத்துறைப் பாடல்கள் இரண்டின்[6] இடையே வைத்து அழகுறப் பாராட்டியுள்ளார். தமிழ்ச் சங்கப் புலவர்க்குத் தலைவராம் தகுதி பெற்ற நக்கீரர்'[7] என எழுதியுள்ளேன்.

## 2. திரு. ரா. இராகவையங்கார் அவர்கள் கருத்து :

1951ல், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியீடான 'கோசர்' என்ற தலைப்புள்ள தம் நூலில் ஓரிடத்தில்[8] திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள்,

'சோணாட்டில் இவர் (கோசர்) வலி பெற்று வீறு தலைக் கண்டு பொறாது கிள்ளிவளவன் இவர் படையைச் சிதற அடித்தான்' எனக் கூறிவிட்டுத் தம் கூற்றிற்குச் சான்றாக மேலே கூறிய அகச்சான்றுகள் நான்கினுள்

அகம்;205, மதுரைக் காஞ்சி 771-773 ஆகிய இரண்டினை மட்டும் காட்டியுள்ளார்.

அதே நூலின் வேறொரு பக்கத்தில் 'இக்கிள்ளிவளவன் தன் நாட்டு வலிமிகுத்தோங்கும் கோசர் நிலத்தைக் கொள்ள விரும்பி இவர் விளங்கு படையை நூறினான்'[9] என்றும் கூறியுள்ளார்.

## 3 டாக்டர் சி ஈ இராமச்சந்திரன் அவர்கள் கருத்து :

சென்னைப் பல்கலைக் கழக வாலாற்றுத்துறைத் தலைவராக விளங்கிய திரு. சி, ஈ. இராமச்சந்திரன் அவர்கள்[8] 1974ல் வெளிவந்த,'வரலாற்று நோக்கில் அகநானூறு (Ahananuru in its Historical setting) என்ற தலைப்புள்ள தம் ஆங்கில நூலின், 20 ஆம் பக்கத்தில்

'கிள்ளிவளவன், காவிரிப்பூம் பட்டினத்து மன்னன் ! அவன் தன் நாட்டு எல்லையை விரிவாக்கிக் கொள்ளும் ஒரு முயற்சியில், செல்வ வளம் மிக்க கோசர் படையைத் தாக்கி அழித்தான் என நக்கீரரும் கூறியுள்ளார்' எனக் கூறித்தம் கூற்றிற்குச் சான்றாக நக்கீரர் பாடிய, மேலே காட்டிய அகம், 205' பாடலைக் காட்டியுள்ளார்[10]

அதே நூலில் பக்கம் 26ல், 'பழையன்மாறன், கிள்ளி வளவனால், கூடல் எனும் இடத்தில் தோற்கடிக்கப் பட்டான் கிள்ளி வளவன் பழையனுக்குரிய பல களிறுகளை யும், விரைந்து பாயும் குதிரைகளையும் கைப்பற்றிக் கொண் டான்' எனக் கூறிவிட்டு தம் கூற்றிற்குச் சான்றாக அகம் 306ஐக் காட்டியுள்ளார்.[11]

பக்கம் 51ல், 'அகநானூற்றின் பிறி தோரிடத்தில், அதாவது அகம் 205ல், கிள்ளி, தன் நாட்டு எல்லையைப் பரப்பும் ஆகையால், கோசர் படையை அழித்தான் எனக் கூறப்பட்டுள்ளது. இந்தக் கிள்ளியும், மேலே கூறிய கிள்ளி வளவனும் (பக்கம் 20) ஒருவனாகக் கருதப்படுகிறது' எனக் கூறியுள்ளார்.[12]

## 4. திரு. மயிலை சீனி வேங்கடசாமி அவர்களின் கருத்து :

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினரால் தொகுக்கப் பெற்று, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், தமிழ் வளர்ச்சி இயக்கத்திற்காக 1983ல் வெளியிட்டிருக்கும், 'தமிழ்நாட்டு வரலாறு-சங்க காலம்-அரசியல்' என்ற நூலில், 'சோழர்' பற்றிய வரலாறு எழுதியிருக்கும், ஆராய்ச்சிப் பேரறிஞர் திருவாளர். மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்கள், அந் 333ம் பக்கத்தில், 'பொலம்பூண் கிள்ளி' வரலாறு உரைக் கும் பகுதியில்,

'பொலம்பூண் கிள்ளி என்று குறிப்பிடப்படும் இவன் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்துகொண்டு காவிரிஆற்றுப் பள்ளத்தாக்கிலுள்ள நாட்டை ஆண்டு வந்தான்.

இவன் கோசர்களின் படையை அழித்தான். அன்றி யும், அவர்களது நாட்டையும் கைப்பற்ற முயன்றான்' எனக் கூறி; மேலே காட்டிய அகச்சான்றுகள் நான்கினுள்[13] அகம் 205ஐ மட்டும் காட்டியுள்ளார்.

பாட்டு :

வரலாற்று ஆய்வாளர்களை யெல்லாம் இவ்வாறு பெரிய குழப்பத்திற்கு உள்ளாக்கும், அச்சிலவரிகள் கூறும்

உண்மைப் பொருள்தான் என்ன என்பதை இனி, ஆராய் வோம்; இதோ அச் செய்யுள் :

"வாய்மொழி நிலைஇய சேண் விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்கு படை நூறி,
நிலங்கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி
பூவிரி நெடுங்கழி நாப்பண் பெரும் பெயர்க்
காவிரிப் படப்பைப் பட்டினம்..."

## பாட்டின் பொருள் :

இதுவே அப்பாட்டு. இதில் கூறப்பட்டிருப்பதெல்லாம் கொடுக்கும் வாக்குறுதிகளைத் தப்பாமல் காக்கும் இயல்பு டைமையால் பெற்ற புகழ், தொலை நாடுகளிடத்தும் சென்று பலரும் அறியக் கிடக்கும் நல்லபுகழ் வாய்ந்தவரும் செல்வ வளத்தால் சிறந்தவரும் ஆகிய, கோசர் என்ற இனத்தவரின், வெற்றிப் புகழ் வாய்ந்த படையினை, அற வே இல்லாமல் போக அழித்து, அக் கோசருக்குரிய நிலத் தைக் கைப்பற்றிக் கொள்ள விரும்பியவனும், பொன்ன ணிகளால் சிறப்புற்றவனும் ஆகிய, கிள்ளி என்ற சோழ னுக்கு உரியதும், பூக்களால் நிறைந்ததும், நீண்ட நீரோடைகளின் நடுவே அமைந்ததும், பல்வேறு மரங்கள் நிறைந்த தோட்டங்களை யுடையதும் பலரும் போற்றும் பெரிய புகழை உடையதுமான, காவிரிப்பூம்பட்டினம்' என்பது மட்டுமே.

## சொல்லாட்சி :

இப்பாட்டில், அறிமுகம் செய்து வைக்கப்பட்டிருப்பவர் இருவர். ஒருவர், கோசர்; மற்றொருவன், கிள்ளி.

இவர்கள் இருவரையும் அறிமுகம் செய்து வைத்திருக்கும் இப்பாட்டின் ஆசிரியர், அவர்களை எவ்வாறு அறிமுகம் செய்து வைத்துள்ளார். என்பதைக் காண்பது, அவ் விருவரையும் ஆசிரியர் எவ்வாறு மதித்துள்ளார் என்பதை அறிவதற்குத் துணை செய்யும் ஆகவே, இனி அதைக் காண்போம்.

கோசரைப் பற்றிக் குறிப்பிடும் போது, 'வாய்மொழி நிலை இய கோசர்' 'சேண் விளங்கு நல்லிசைக் கோசர்' 'வளம் கெழு கோசர்' என்றும், அவர் படையைக் கூறுங் கால், 'விளங்கு படை' என்றும் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

அக் கோசர் படையைவென்று அவர் நிலத்தைக் கைப். பற்ற விரும்பியவனைக் கூறுங்கால், அவன் இயற்பெயர் யாது என அறிந்து கொள்ள இயலா நிலையில், சோழர் குலத்தவர் அனைவரையும் பொதுவாகக் குறிக்கும், சென்னி, கிள்ளி, வளவன் போலும் பொதுப் பெயர்களில் ஒன்றாகிய 'கிள்ளி' என்றே குறிப்பிட்டுள்ளார். கோசர் களையும், அவர்தம் படைகளையும் குறிப்பிட்டது போல் அல்லாமல், கிள்ளி அணிந்திருக்கும் அணியைமட்டுமே, அவனுக்குரிய சிறப்பாகக் கொண்டு, பொலம்பூண் கிள்ளி' எனக் கூறியுள்ளார்.

கோசர்குரிய நாட்டைக் குறிப்பிடுங்கால், வறிதே 'நிலம்' என்றும், கிள்ளிக்குரிய பட்டினத்தைக் குறிப்பிடுங் கால், 'பூவிரி நெடுங்கழி நாப்பண், பெரும் பெயர் காவிரிப் படப்பைப் பட்டினம்' எனச் சிறப்பு அடைக்கு மேல் அடை கொடுத்தும் குறிப்பிட்டுள்ளார்.

கோசர் படையை அழிக்க நினைத்த கிள்ளியின் செயலை 'நூறி' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார். கோசர் நிலத்தைக் கைக் கொள்ள ஆசைப்பட்ட அவன் செயலை 'வெஃகிய' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார்,

சொல்லின் பொருளாட்சி :

கோசரையும், கிள்ளியையும் குறிப்பிடுங்கால், ஆண்டிருக்கும் சொற்றொடர் நிலைகளைக்கண்டது மட்டும் போதாது.

அச் சொற்றொடர்களில் ஆளப்பட்டிருக்கும் ஒவ்வொரு சொல்லின் பொருளாட்சியையும் காணுதல் வேண்டும்; அப்போது தான் ஆசிரியரின் உள்ளத்தை உள்ளவாறு அறிதல் இயலும் இனி அது காண்போம்.

வாய்மை :

"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமையிலாத சொலல்" என்பது திருக்குறள்[14]

"சாரணர் வாய்மொழி" என்ற சிலப்பதிகாரத்
தொடர்க்கு[15]
அடியார்க்குநல்லார் அளித்திருக்கும் உரை
"சாரணர் அருளிச் செய்த உண்மை மொழி" என்பது.

ஆகவே, கோசர், என்றும் தீமையில்லாத உரையே வழங்குபவர்; என்றும் உண்மையே பேசுபவர், என இச் சொல், கோசர்க்குப் பெருமை சேர்த்துளது.

நிலை இய :

"நடுக்கின்றி நிலை இயது என்பதல்லது ஒடுக்கம் கூறார்" என்பது சிலம்பு[16] ஆகவே, கோசர் வாய்மொழி நடுக்கம் இல்லாதது; ஒடுக்கம் இல்லாதது ; அதாவது அழியா இயல்புடையது; ஆகவே, இச் சொல் கோசர்களின்

வாய்மொழிக்குச் சிறப்பளிப்பதன் மூலம் கோசர்க்குமேலும் புகழ் சேர்த்துளது.

**சேண் :**

'சிந்தை செல்லாச் சேணெடும் தூரம்' என்பது சிலம்பு[17] 'சேண் நாறும் பிடவம்' என்ற முல்லைப்பாட்டு வரிக்கு[18], நச்சினார்க்கினியர் அளிக்கும் உரை, 'தூரிய நிலத்தே நாறும் பிடவம்' என்பது. ஆக கோசர் புகழ் சிந்தையாலும் நினைத்துப் பார்க்க மாட்டாத் தொலை நாடுகளிலும் சென்று பரவும் பெருமையுடையது.

**விளங்கு :**

"கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல் தெரிதல் வல்லார் அகத்து"[19]
"குடிப்பிறந்தார் கண் விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து"[20]
என்பன திருக்குறள்கள்.

'விளங்கும்' என்பதற்குப் பரிமேலழகர் அளிக்கும் விளக்கம், 'உலகெங்கும் பரந்து வெளிப்படும்' என்பது

ஆக கோசர் புகழ் உலகெங்கும் பரந்து வெளிப்படும் பெருமை வாய்ந்தது என்பதால், இச் சொல்லும் கோசர்க் குப்பெருமை சேர்ப்பதாய் அமைந்துள்ளது.

**நல் இசை :**

இசை என்றாலே புகழைக் குறிக்கும், அதிலும் நல் இசை என்றால் புகழ் தரும் வழிகளில், நல்வழியில் பெற்ற

புகழ் என்றாகும். 'தோன்றின் புகழொடு தோன்றுக'[21] அத்தகு நல்புகழை இயல்பாகவே பெற்ற பெரியவர்கள் கோசர் என்பதாயிற்று.

### விளங்கு படை :

'விளங்கு' என்பதற்கு முன்னரே விளக்கம் அளிக்கப் பட்டது, அப்பெருமைக் கெல்லாம் உரிய படை கோசர் படை.

### நூறி :

இது, பொலம்பூண் கிள்ளி விரும்பிய செயலைக் குறிப் பிடுவது. 'அருசமம் தகைய நூறி'[22] என்ற வரிக்கு உரை யாசிரியர் அளிக்கும் உரை, 'சிதற வெட்டி' என்பது. அறவே உருவே தெரியாமல் அழித்து என்பது. இது பொலம்பூண் கிள்ளியின் உள்ளத்து வெறித் தன்மையையே உணர்த்து வதாய் அவனுக்கு இழிவு சேர்த்துளது.

### கொள :

'கொள்வது தீது', நல்லாறு எனினும் முகாளது தீது[23] என்பன ஆன்றோர் உரைகள் : கொள்வதாவது, தனக்கு உரிமையில்லாததைப் பெறுவதே கொள்வதாம். ஆக, இதுவும் கிள்ளியின் ஆகா ஆசையை உணர்த்தி அவன் புகழ் குறைப்பதாம்.

### வெகிய :

வெகுதலாவது : பிறர்க்குரிய பொருளை வெளவுதல் ஒருவர்பால் இருக்கக் கூடாதனவற்றுள் வெகுதலையும்

கொண்டு, 'வெஃகாமை' என்ற தலைப்பில், பத்துக் குறள் களில்,[24] வெகுதலின் கொடுமையை விளக்கியுள்ளார் திருவள்ளுவர்.

'வெஃகின், குடிபொன்றிக் குற்றமும் ஆங்கே தரும்,'[25] 'இறல் ஈனும் எண்ணாது வெஃகின்'[26] என்பன அவர் வழங்கும் அறிவுரை ;

பிறர் பொருளை வெஃகுவார், அடுத்து என்ன செய் வார் என்பதையும் வள்ளுவரே விளக்கியுள்ளார். வெஃகு வார், வெறித்தனமான செயல்களை மேற்கொள்வர். 'வெஃகி வெறிய செயின்'[27] என்பது அவர்தரும் விளக்கம் ஆக, இச் சொல்லும், பொலம்பூண் கிள்ளிக்குப் புகழ் சேர்ப் பது இல்லை, மாறாக இழிவையே சேர்ப்பதாம்.

பெரு நாடும். பெரும் பொருளும் பெற்றிருத்தல் தமக்கே உரிமை, தம் கண்முன்னே பிறர் தம்மினும் பெருக வாழ்வதா என எண்ணி, அவர்பால் உள்ள பொருள் மீது ஆசை கொண்டு விட்டால் ; வெஃகி விட்டால், அவ்வாசை கொண்டவர் உள்ளம் வெறிபிடித்து விடும். நல்லன எதை யும் எண்ணாது; பொல்லாதன அனைத்தையும் செய்யத் துணிந்து விடும் பொலம்பூண்கிள்ளியின் செயலும் அதுவே;

பொலம்பூண் கிள்ளியின் நாடாசையைக் கூறும் இப் பாட்டின்[28] ஆசிரியர் நக்கீரர், பிறிதொரு பாட்டில்[29] கிள்ளி அடுத்து செய்த செயல்களையும் கூறியுள்ளார். கோசர் நிலம் கொள வெஃகிய கிள்ளி, அடுத்து செய்த செய லாக அப்பாட்டில் அவர் கூறியிருப்பது இது :

'களம் புகுந்து காற்றென விரைந்து பாயும் குதிரைப் படைகளையும், எண்ணிலாக் களிற்றுப் படைகளையும்,

அவற்றைச் செயல் படுத்தும் வீரர்களையும் கொண்ட வெள்ளம் போல் பரந்த பெரிய படையைக் கொண்டு சென்று, பாண்டியர் தலைநகராம் கூடல் மாநகரை வளைந்துக் கொண்டு ஆங்குத் தனக்கு வாய்ப்புடைய இடம் என அவன் தேர்ந்து கொண்ட இடத்தே பாடி கொண்டு தங்கி விட்டான். அக் காலை பாண்டியர் அரியணையில் வீற்றிருப்போன், இளையனே ஆயினும், பாண்டியர் குலத்து வந்தோர் பலருள்ளும் சிறந்தோனாகிய தலையாளங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், என்பதை அறிய மறந்து விட்டது கிள்ளியின் வெஃகுதல் அதனால் வெறி கொண்டு விளைவை நினையாது சென்று தங்கி விட்டான்,[30] விளைவு தெரிந்ததே !

ஆக சொல்லாட்சி நிலையினும், ஆசிரியர் நக்கீரர், கோசர்க்குப் புகழ்சேர்த்துள்ளார் : பொலம் பூண் கிள்ளிக்கு இகழ் சேர்த்துள்ளார் என்பது தெளிவாகிறது.

**வினைச் சொற்களின் முடிவு :**

இனி, 'கோசர் விளங்கு படை நூறி, நிலம் கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி [31] என்ற தொடரில் இடம் பெற்றிருக்கும் வினைச்சொற்களின் முடிவினைக் கொண்டு வரலாற்றுப் பேராசிரியர்களின் கருத்தினை ஆராய்வாம்.

இத் தொடரில் இடம் பெற்றிருக்கும் வினைச் சொற்கள் மூன்று : அவையாவன : நூறி, கொள. வெஃகிய இவற்றுள் நூறி என்பது இறந்த கால வினையெச்சம்:அது கொள என்பதில் உள்ள கொள் என்ற வினையைக் கொண்டு முடிந்தது; கொள என்பது எதிர்கால வினையெச்சம் அது வெஃகிய என்பதில் உள்ள வெஃகல் என்ற வினையைக் கொண்டு முடிந்தது, வெஃகிய என்பது இறந்த காலப்

பெரெச்சம்; அது பொலம்பூண்கிள்ளி என்ற பெயரைக் கொண்டு முடிந்தது,

ஒரு தொடரில், வினையெச்சங்களும், பெயரெச்சங் களும் ஆகிய பல எச்ச வினைச் சொற்கள் அடுக்கி வரும் நிலையில் அவ் வெச்சங்களின் நிலை என்ன? தொல்காப் பியர் அளிக்கும் விளக்கம் அல்லது விதி இது ;

"பன் முறையானும் வினையெஞ்சு கிளவி
சொல்முறை முடியாது அடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே''[32]

இதற்கு உரையாசிரியர் விளக்கம் வருமாறு :

"பல எச்சம் உடனடுக்கி வந்து பின் இறுதிக்கண் ஒன் றற்கேற்ற முடிபு ஏற்றக்கால் அதனால் அவ்வெச்ச மெல் லாம் முடிந்தபொருளாக முடிபுகொள்ளும் : உழுது உண்டு தின்று ஓடிப்பாடி வந்தான் என வரும் இஃது ஓரினத்து எச்சம் பல அடுக்கி வந்தது; அவற்றுள் பாடி என்பது வந் தான் என்னும் முடிவு கொண்டு முடிந்தது. அம் முடிபே அவ்வடுக்கி நின்ற பிற வெச்சங்கட்கும் முடிபாயிற்று என்ற வாறு, எனவே, அது முடியாக்கால் ஒழிந்த எச்சங்கள் முடியா என்பதாம்.

சற்று விரிவாகவே விளக்க விரும்புகின்றேன். உழுது வந்தான்; உண்டு வந்தான்; தின்று வந்தான்; ஓடி வந் தான்; பாடி வந்தான் என்பன போல்' ஒவ்வொரு வினை யெச்சத்திற்கும் முற்று வினை கொடுத்து வழங்கிய வழி, 'வந்தான்' 'வந்தான்' என ஒரு சொல்லையே, மீள,மீள ஆளுவதால், சொற்றொடரும் நீளுகிறது; கேட்போரும் வெறுப்படைவர் அதனால் வினை முதல் ஒன்றாக, அதன் பல்வேறு வினைகளையும் அடுக்கிக் கூறும்போது, மேலே

கூறியவாறு கூறாமல் மாறாக, 'உழுது, உண்டு, தின்று, ஓடி, பாடி வந்தான்' எனக் கூறினால், கூற வேண்டிய பொருளிலும் குறைநேரவில்லை; அதே நிலையில் சொற்றொடர் இனிமையும் பெறுகிறது. அவ்வாறு வினையெச்சங்களை அடுக்கிக்கொண்டே சென்று, இறுதியில், ஒரு முற்று வினையால் அத்தொடர் முடிக்கப்பெற்றால் தான், அதற்கு முன் அடுக்கிக்கூறப்பெற்ற வினையெச்சங்கள் உணர்த்தும் வினைகளும் முடிக்கப் பெற்றனவாகும்.

அவ்வாறின்றி, நம் தந்தையார் ஐந்து ஏக்கர் நிலம் வாங்கி, பெரிய கிணறு வெட்டி, மின்சார நீரேற்றுவான் அமைத்து கரும்பு நடவு செய்ய விரும்பிய நிலம் இதுதான், எனச் சொற்றொடர் அமைந்தால், தந்தையார் விரும்பியது உண்மையாக இருக்கலாம்; ஆனால், அவர் விருப்பம் நிறைவேறிற்றா? நிலம் வாங்கப்பட்டதா? கிணறு வெட்டப்பட்டதா? நீர் ஏற்றுவான் நிறுவப்பட்டதா? கரும்பு நடவு செய்யப்பட்டதா? என்பதற்கு விடை காணல் இயலாது; தந்தையாரின் விருப்பம் வெறும் விருப்பமாகவே இருந்து கழிந்துபோக, வாங்குவதும், வெட்டுவதும், நிறுவுவதும், நடவு செய்வதும் நிகழாமலே போயிருக்கவும் கூடும்.

அதேபோல், பொலம்பூண் கிள்ளி, கோசர் படையை நூறி, அவர் நிலத்தைக் கைக்கொள்ள வெஃகியது உண்மையாக இருக்கலாம். ஆனால் அது நிறைவேறிற்றா, அல்லது வெறும் ஆசையாகவே போய் விட்டதா, என்பதை அறுதியிட்டுச் சொல்ல இயலாது; அதை முடிவு செய்ய, வேறு அகச் சான்றின் துணையினை நாடவேண்டும்.

## ஆய்வாளர் தம் கடமை :

வரலாற்று ஆசிரியர்கள், ஒரு நிகழ்ச்சி பற்றி முடிவு எடுக்கும்போது, அந் நிகழ்ச்சி பற்றித் தமக்குக் கிடைத்த

ஒரு அகச்சான்று மட்டும் கொண்டு ஒரு முடிவுக்கு வந்து விடுதல் கூடாது; ஒன்று, அந் நிகழ்ச்சி பற்றிக் கூறும் அனைத்து அகச்சான்றுகளையும் கருத்தில் கொள்ளவேண்டும். இரண்டு, அந்த அகச் சான்றினை அளிக்கும் புலவர் யார்? அவர் அதுபற்றி வேறு ஏதேனும் கூறியுள்ளனரா? என்பதையும் பார்க்க வேண்டும் மூன்று. அந்நிகழ்ச்சியோடு தொடர்புடைய வேறு அகச் சான்றினை அளிக்கும் புலவர், அப்பாட்டுடைத்தலைவன் பற்றிக் கூறியிருக்கும் வேறுசெய்திகள் யாவை? நான்கு; அப்பாட்டுடைதலைவனை இந் நிகழ்ச்சியோடு தொடர்பு படுத்தி வேறு புலவர் யாரேனும் கூறியுள்ளனரா? கூறியிருந்தால், யாது, அந்தச் செய்தி, என்பனவற்றையும் கருத்தில் கொள்ளவேண்டும்

அகநானூறு, 205ஆம் பாடலில், பொலம்பூண் கிள்ளியின் 'கோசர் படையை நூறி, அவர் நிலங்கொள வெஃகிய செயலைக் கூறிய நக்கீரரே, அகநானூறு 306ஆம் பாட்டையும் பாடியுள்ளார்; வரலாற்று ஆசிரியர்கள் யாரும் இந்தப் பாட்டைக் கருத்தில் கொள்ளவே இல்லை. இந்தப் பாட்டில், பொலம் பூண் கிள்ளி எனவும் அழைக்கப்பெறும் கிள்ளிவளவன், விரைந்து பாயும் குதிரைப்படை, களிற்றுப் படைகளைக்கொண்ட பெரும் படையோடு வந்து கூடல் மாநகரைத் தாக்கினான். ஆனால் கோசர் படைத் தலைவன் பழையன் மாறன் தன் தேர்ப்படை, யானைப் படைகளோடு சென்று கூடல் மாநகருக்கு அணித்தாக அச் சோழனை வென்று, அவன் கொண்டு வந்த குதிரைப்படை களிற்றுப் படைகளைக் கவர்ந்து கொண்டதோடு, சோழனுடையவும், அவனுக்குத் துணை வந்த பிற அரசர்களுடையவுமான பல ஊர் களைக் கவர்ந்து கொண்டான். பழையன் மாறனிடம் சோழன் பெற்ற இப் பெருந்தோல்வி அறிந்து, அச் சோழர் குலப் பகைவனாகிய, சேரர் குலக் கோக் கோதை மார்பன் மகிழ்ச்சி அடைந்தான்'[33] என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

இது கூறும் நக்கீரர் பாடிய நெடுநல்வாடையின் பாட்டுடைத் தலைவன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் தம் பாட்டுடைத் தலைவனின் படைத் தலைவன் பழையன் மாறன், அப் பாண்டியர் குலப் பகைவராம் சோழர் வழி வந்த பொலம்பூண்கிள்ளிபால் தோல்வி கண்டிருந்தால், அதைத் தம் இரு பாடல்களில் கூறிப் பாராட்டியிருப்பாரா, என்ற கேள்விக்கு விடையிறுக்க வேண்டியது வரலாற்று ஆசிரியர்களின் இன்றியமையா முதற் பெரும் கடமை ஆகும்.

## புறநானூறு கூறும் செய்தி :

நிற்க. தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ் செழியனையும், அவனுடைய தலையாலங்கானப் போரையும் சிறப்பித்துப் பல பாடல்கள் பாடிய புலவர் இடைக்குன்றூர் கிழார் அவர் தம்முடைய ஒரு பாட்டில்,

'எல்லா வகையிலும் பெருமை உடையவர் நாம், நம்மிடம் உள்ள படையும் பெரிது, ஆனால் நாம் போரிடப் போகும் பகைவனோ, நனி மிக இளையன், அவனை வெற்றி கொண்டால் நாம் பெறப் போகும் பொருட்குவியலோ எண்ணில் அடங்காது.' எனக்கூறித். தன்னை இகழ்ந்து வந்த, நிலையிலாப் பகையரசர்கள், போர் தொடங்கிய பகையரசர்கள், போர் தொடங்கிய அக்கணமே, தோற்றுப் போர்க்களத்தில் நிற்கவும் மாட்டாது- புறங்காட்டி ஓடத் தொடங்க, அவர்களை அப்போாக் களத்திலேயே அழிப்பது தனக்குப் பெருமையாகாது என்பதால், அவர்களின் நாடு வரையும் துரத்திச் சென்று ஆங்கு அவர்களின் மனைவியர், தம் கணவர்தம் தோல்வி கண்டு நாணி உயிர் துறந்து போக, அப் பகையரசர்களின் தந்தையர் உரிமையாக்கி வைத்த, அவர்களின் ஊர்களிடத்தே கொன்று அழித்தான்'[34] எனக் கூறியுள்ளார்.

அகம் 306ல், நக்கீரர் விளக்கும் பழையன் மாறன் பொலம்பூண் கிள்ளி எனும் கிள்ளி வளவன் இவர்களுக் கிடையிலான போர்க்கள விளக்கமும், புறம் 78ல் இடைக் குன்றூர் கிழார் விளக்கும், தலையாலங் கானத்துப்போர் வென்ற நெடுஞ்செழியன்–பெயர் அறியா அவன் பகைவர், இவர்களுக் கிடையிலான போர்க்கள விளக்கமும் ஒன்றாக இருத்தல் காண்க. விளக்கங்கள் ஒன்றாக இருத்தல் மட்டும் அன்று; இருவர் கூறும் போர்க்களமும் ஒரு போர்க் களமே; முடிவு; பழையன் மாறன் அழிவோ, கோசர் படை அழிவோ அன்று; மாறாகப், பொலம்பூண் கிள்ளியின் அழிவே!

# சான்றெண் விளக்கம்

1. மதுரைக் காஞ்சி-வரிகள் ; 507-508; 771–772
   அகநானூறு–பாடல்கள் 205; 306

2. பக்கம்

3. பக்கம்-78–79

4. பக்கம்-79-80

5. பக்கம்–80

6. அகம்-205, 246

7. புலவர். கா. கோவிந்தன், தமிழகத்தில் கோசர்கள், 1960, பக்-80

8. பக்கம்-11

9. பக்கம்-41

10. 'Nakkirar has also mentioned in the Ahananuru (205) that Killivalavan, was the lord of Kaveripum-pattinam and that he attacked and destroyed the forces of the wealthy Kosar, in an attempt to extend his domain'.

11. 'Palayan Maran was defeated at Kudal, by Killivalavan, who captured the City along with many elephants

and fast steeds, and that Kcdari Marbhan, rejoiced at the defeat of Palayan Maran, (Aham, 306). That Palayan Maran was a Pandiya, becomes evident from the Ninth Pathigam of Padirruppattu';

12. 'In another place in the Ahananuru (205), it is stated, that, killi destroyed the forces of the Kosar, with the desire of conquering lands. This Killi has been identified above (Page 20) with Killivalavan."

13. மதுரைக்காஞ்சி - 507-508; 771-772
அகம்–205,306.

14. குறள்-291.

15. சிலம்பு ; 10:192.

16. 1:17-18.

17. பதிகம்: 1-2 அடியார்க்கு நல்லார் உரை

18. வரி-25

19. குறள்-717

20. குறள்-957

21. குறள்–236

22. புறம்–93

23. குறள்-222

24. அதிகாரம்-18

25. குறள்-172
26. குறள்-180
27. குறள்-175
28. அகம்-205
29. அகம்-306

30. "...மாடமலி மருகின் கூடல் ஆங்கண்
வெள்ளத் தானையொடு வேண்டுபுலத்து இறுத்த
கிள்ளி வளவன்..."

31. அகம்-205

32. தொல் : சொல் : 34

33. "நெடுநகர்,
இழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மருகின் கூடல் ஆங்கண்
வெள்ளத் தானையொடு வேண்டு புலத்து இறுத்த
கிள்ளி வளவன் நல்லமர் சாஆய்க்
கடும்பரிப் புரவியொடு களிறுபல வௌவி
ஏதில் மன்னர் ஊர் கொளக்
கோதை மார்பன் உவகையின் பெரிதே"

34. புறம்-78
"விழுமியம்; பெரியம் யாமே; நம்மில்
பொருநனும் இளையன்; கொண்டியும் பெரிது" என
எள்ளி வந்த வம்ப மன்னர்,
புல்லென் கண்ணர், புறத்திற் பெயர,
ஈண்டு அவர் அடுதலும் நல்லான்; ஆண்டு அவர்
மாணிழை மகளிர் நாணினர் கழியத்,
தந்தை தம்மூர் ஆங்கண்
தெண்கிணை கறங்கச்,சென்றுஆண்டு அட்டனனே'

# 5. கோசரும், நன்னனும் அகுதையும்

கொண்கான நாட்டின் ஏழிற்குன்றத்து ஒருபகுதி பாழி சேரர் குலத்தோடு யாதோ ஒரு வகையில் உறவுடையனா கவே, உதியன் என்ற சேரர் குலப்பெயர் தாங்கிய நன்னன் என்பானுக்கு உரியது, நல்ல காவல்மிக்கது. அத்துணைக் காவல் உடையதாகவே, வேளிர்கள் தங்கள் பொற்கட்டி கள், பொன்னாலான அருங்கலக் குவியல்களை ஆங்கு வைத்துப் போற்றிக் காத்து வந்தனர். பாழியின் காவல் பொருப்பினைப் பறவைக் கூட்டத்தைப் பேணிப்புரக்கும் அருள் உள்ளம் உடையவனும், வெள்ளம் போலும் பெரும் படையுடையவனும், வேளிர்குடி வந்தவனும் ஆய, ஆஅய் எயின்ன் என்பான் பால் ஒப்படைத்திருந்தான் நன்னன்.

பாழிப் பெருஞ்செல்வத்தைக் கொள்ளை கொள்ள விரும்பினான் மிஞிலி என்பான் யானைப் படை, தேர்ப் படைகளைக் கொண்ட பெரும்படை ஒன்றும் அவன்பால் இருந்தது. பாழி நகர் அருஞ்செல்வத்தைக் கவர்ந்து கொள்ள அப்படையே போதும் என்றாலும், பாழிப் பெருஞ் செல்வத்தை எயினன் படை காத்து நிற்கிறது என்ற உண்மை நிலையோடு, அதைப் பேய்க் கூட்டம் ஒன்றும் காத்து நிற்கிறது என்ற குருட்டு நம்பிக்கை ஒன்றும் நிலவியிருந்தது. அதனால் எயினன் படையோடு மோதுவதற்கு முன்னர் அப் பேய்க் கூட்டம் விரும்பும் பெரும் பலி கொடுத்து பணிந்தான் மிஞிலி;

தான் கொடுத்த பலியினை ஏற்றுக் கொண்ட பேய்க் கூட்டம் போரில் தனக்குத் துணை நிற்கும் என்ற நம்

பிக்கை ஊக்கமூட்டவே களம்புகுந்து எயினனை எதிர்த்துப் போரிட்டான், நிகழ்ந்த கடும் வாட் போரில், எயினன் வாட்புண் பெற்று இறந்து போனான், மிஞிலி வீரர்கள், தம் வாட்களை வானோக்கி உயர்த்தி வெற்றிக் கூத்தாடிக் களித்தனர்.

ஆஅய் எயினன் வீழ்ந்து விட்டான்; அவனுக்குத் துணை நின்ற வேளிர்குல வீரர் பலரும் வீழ்ந்து விட்டனர். அதைக் கண்ணுற்றன, எயினன் பேணி வளர்த்த பறவைக் கூட்டம். அவற்றால்; இறந்தாரை உயிர்ப்பிக்க இயலாது, எனினும், அவர் தம் உடல்களை வெயில் படாதவாறு காக்க வாவது வேண்டும் என்று கருதின. சிறகுகளை விரித்துப், பந்த லிட்டாற்போலப் பறந்து நிழல் தந்தன.

கணவன்மார்களைக் களத்தில் பறி கொடுத்த வேளிர் மகளிர் களம் புகுந்து தாம் சூடியிருந்த மலர் களைக் களைந்து கசக்கி எறிந்து கலங்கலாயினர்.

போரின் முடிவினையும், போர்க்கள நிகழ்ச்சிகளையும் அறிந்து கொண்டான் நன்னன் தன் பொருட்டு உயிர் துறந்த எயினன் உடலை அடக்கம் செய்ய வேண்டுவதும் வேளிர் மகளிர் துயர் துடைக்க வேண்டுவதும் அவன் கடமை, ஆனால் அவன் போர்க்களம் சென்றானல்லன். பறவைக் கூட்டத்திற்கு இருந்த அருள் உள்ளம் கூட அவ னுக்கு இல்லை மிஞிலிக்கு அஞ்சி, அரணுக்கு உள்ளேயே ஒளிந்து கொண்டான்.

வேளிர்மகளிர் துயர் களைவார் யாரும் இல்லை. அந் நிலையில் வந்து உதவினான் பெரும்படை யுடையவனும், தன் நாளோலக்கத்தில் அமர்ந்து, பாணர் பொருநர் போலும் இரவலர்களுக்குப் பொன்னணிகளை வாரி வழங் கும் வள்ளல் பெருந்தகையுமான அகுதை என்பான். அவன் வேளிர்மகளிர்துயதுர் டைத்துத் துணை நின்றான்,

தான் செய்ய வேண்டிய கடமையைத் தான் செய்யத் தவறிய கடமையை, அகுதை செய்தது அறிந்து அவனை அழைத்துப் பாராட்டி நன்றி சொல்வது விடுத்து, 'நான் செய்ய வேண்டியதை இவன் யார் செய்வது? அது செய்து எனக்கு இழிவை அல்லவா செய்து விட்டான்' என அகுதை பால் கடுஞ்சினம் கொண்டான் நன்னன்.

நன்னன் இயல்பை அறிந்தவர் கோசர் இரக்க உணர்வு இல்லாதவன். அத்தகையான் அகுதைக்கு யாதேனும் கொடுமை இழைக்கவும் கூடும், ஏன் கொல்ல வும் கூடும் என அஞ்சினார்கள் கோசர். அதனால், அகு தையை நன்னன் அணுக முடியாத அரண்மிக்க இடத்தே வைத்துக் காத்தனர். தமிழக வரலாற்றில், கோசர் ஆற் றிய அருஞ்செயல்களுள் ஒன்று இது.

கோசரின் இவ்வருஞ்செயல் உணரத் துணைபுரிவன, கல்லாடனார், பரணர், பாலை பாடிய பெருங் கடுங்கோ மாமூலனார் ஆகிய புலவர் பெருமக்கள் நால்வர் அளிக்கும் கீழே கொடுத்திருக்கும் பத்துப் பாக்கள்.

1. "பொன்படு கொண்கான நன்னன் நன்னாட்டு
   ஏழிற் குன்றம்'[1]

— பாலை பாடிய பெருங்கடுங்கோ,

2. "நன்னன் பாழி அன்ன கடியுடை வியன் நகர்"[2]

— மாமூலனார்.

3. "நன்னன், எழில் நெடுவரைப் பாழிச் சிலம்பு'[3]

—பரணர்

4. “நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினும் அருமை”[4]

—பரணர்

5. “பாழி ஆங்கண்
வேண்முது மாக்கள் வியன் நகர்க் கரந்த
அருங்கல வெறுக்கையின் அரியோன்”[5]

—பரணர்

6. “நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்கு
ஊட்டு எதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி;
புள்ளிற்கு ஏமமாகிய பெரும் பெயர்
வெள்ளத்தானை எயினற் கொன்று உவந்து
ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பு”[6]

—பரணர்

7. “பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகின் பாழி ஆங்கண்
அஞ்சல் என்ற ஆஅய் எயினன்
இகல் அடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன்உயிர் கொடுத்தனன் சொல்லியது அமையாது”[7]

—பரணர்

8. “வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை, இயல்தேர் மிஞிலியொடு
நண்பகல் உற்ற செருவில், புண் கூர்ந்து
ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தென, புள் ஒருங்கு
அங்கண் விசும்பின் விளங்கும் ஞாயிற்று
ஒண் கதிர் தெறாமை சிறகரில் கோலி

நிழல்செய்து உழறல் காணேன் யான் எனப்
படுகளம் காண்டல் செல்லான், சினம் சிறந்து
உருவினை நன்னன் அருளான் கரப்ப
பெரு விதுப்புற்ற பல்வேள் மகளிர்
குரூஉப்பூம் வைந்தார். அருக்கிய பூசல்
வசை விடக்கடக்கும் வயங்கு பெருந்தானை
அகுதை களைந்தாங்கு''[8]

—பரணர்

9. "அகுதை, களிற்றொடு
நன்கலன் ஈயும் நாண்மகிழ் இருக்கை'[9]

— பரணர்

10. "நன்றல் காலையும், நட்பிற் கோடார்
சென்று வழிப்படூஉம் திரிபில் சூழ்ச்சியில்
புன்தலை மடப்பிடி அகவுனர் பெருமகன்
அமர்வீசு வன்மகிழ் அகுதை போற்றிக்
காப்புக்கை நிறுத்த பல் வேற் கோசர்'[10]

— கல்லாடனார்.

# சான்றெண் விளக்கம்

1. நற்றிணை–391
2. அகம்;15
3. அகம்-152
4. அகம்–258
5. அகம்-372
6. அகம்–142
7. அகம்–396
8. அகம்-208
9. அகம்-76
10. அகம்-113.



# 6. கோசரும், நன்னனும் மாங்கனி தின்ற மங்கையும்

பாழி நகர் நன்னன் கொடியவன் தனக்கு ஊறுநேர்ந்த போது 'அஞ்சேல்' என ஆறுதல் கூறி வந்து, தனக்காகப் போரிட்டு உயிர் துறந்த ஆஅய் எயினனின் குலமகளிர் துயர் துடைக்கும் இரக்கம் அற்ற அரக்கன். அவ் வேள் மகளிர் துயரைத் துடைத்த அகுதையை அழிக்க முனைந்த அறக் கொடியோன்.

அவன் கொடுமை அந்த அளவோடு நின்றுவிட வில்லை; அவன் கொடுமைக்கெல்லாம் மகுடம் சூட்டினாற் போலும் ஒரு கொடுஞ்செயல் தன் காவல் மரமாக அவன் மாமரத்தை வளர்த்து வைத்திருந்தான். அம்மாமரத்தை ஒட்டி ஓடிக்கொண்டிருந்தது ஒரு நீரோடை. ஓடையில், அவ்வூர் மகளிர் சென்று நீராடுவது வழக்கம். ஒரு நாள் அம் மகளிர் நீராடிக் கொண்டிருக்கும் போது அம் மாமரத் துக் காய் ஒன்று காம்பற்று ஓடையில் வீழ்ந்து அடித்துக் கொண்டு வந்தது. அதைக் கண்ணுற்ற மகளிரில் ஒருத்தி அதைக் கைப்பற்றி தின்றுவிட்டாள்.

அது நன்னனுக்குத் தெரிந்து விட்டது. அவ்வளவே அவளைக் கைது செய்து கொண்டு சென்று கொலைத் தண்டம்கொடுத்து விட்டான். அதுஅறிந்த அப்பெண்ணின் தந்தை, நன்னன் அவைபுகுந்து அவனைப்பணிந்து நின்று 'அரசே! என்மகள் செய்த குற்றத்திற்குத் தண்டமாக எண்பத்தொரு களிறுகளையும், அவள் எடையளவு பொன்

னால் செய்யப்பட்ட பாவை ஒன்றையும் கொடுக்கின்றேன்; அவளுக்குக் கொடுத்திருக்கும் கொலைத் தண்டத்தை அருள் கூர்ந்து கைவிடுக' என வேண்டினான். ஆனால், நன்னன் அவ்வேண்டுகோளை ஏற்றுக் கொண்டானல்லன் தான் விதித்த கொலைத் தண்டத்தையே நிறைவேற்றி விட்டான்,

பெண் கொலை புரிந்த நன்னனின் கொடுஞ்செயல் நாடெங்கும் பரவிற்று. கோசரும் அது கேட்டனர். அகுதை பால் நன்னன் நடந்து கொண்ட முறை கண்டே கொதித் திருந்த அவர்கள், இக் கொடுஞ் செயலால் கடுஞ்சினம் கொண்டனர். பெண் கொலை புரிந்த நன்னனைப் பழி தீர்த்துக்கொள்ள முடிவு செய்தனர். அவனைக் கொலை செய்து விடலாம். அது அவர்களுக்கு எளிய செயல் ஆனால் அது அவனுக்கு உரிய தண்டனை ஆகாது. மாறாக எந்த மாமரத்துக் காயைத் தின்றாள் என்பதற் காக, அப்பெண்ணைக் கொன்றானோ, அந்த மரம் வேரற்று விழ வேண்டும் வீழ்ந்த மரத்தைச் சிறு சிறு துண்டங்களாக்கி, நாட்டாரெல்லாம் கொண்டு சென்று விடவேண்டும்; மாமரம் நின்ற இடம் வெற்றிடமாக இருப் பதைக் கண்டு, கண்டு, அவன், காலமெல்லாம் கண்ணீர் சொரிந்து கலங்கிக் கிடக்க வேண்டும்; அதுவே, அவனுக்கு அளிக்கத்தரும் தண்டனையாகும் என்ற முடிவிற்கு வந்தனர்.

அம் முடிவிற்கு வந்த கோசர், தம் பணியில் அகுதை யின் பங்கும் இருக்க வேண்டும்; அப்போது தான், நன்ன னைத் துயரின் எல்லைக்கே துரத்தமுடியும் என்று எண்ணினர்.

அகுதை, தன் அவை புகுந்து, தன் புகழ்பாடும் அகவல் மகளிர்க்கு, அவர் விரும்பும் பொன்னணிகளோடு, பிடி

யானைகளையும் பரிசில் பொருட்களாக அளிப்பவன் என்பதை அறிந்தவர் கோசர் அதனால், அகவல் மகளிர்சிலரை இம்முறை, "அணிகலன் வேண்டாம்; அவற்றிற்கு ஈடாக வழக்கமாகக் கொடுக்கும், பிடி யானைகளோடு, மேலும் சில பிடியானைகளைத் தருக" என வேண்டிப் பெறுமாறு பணித்து அகுதை பால் அனுப்பி வைத்தனர். அகவல் மகளிரும், அகுதைபால் சென்று, பரிசில் பொருட்களாக எண்ணற்ற பிடி யானைகளைக் கொண்டு வந்தனர்.

தம்மை மதித்துப் பரிசில் அளிப்பானைப் பாடிப்புகழும் இரவலர்கள், தம்மை மதியாத மன்னனுக்குப் பாடம் புகட்ட தம்மை மதிக்கும் மன்னனைப் பாடி, பரிசிலாகப் பெறும் யானைகளை, மதியாத மன்னனின் காவல் மரத்தில் பிணித்துப் போய் விடுவர் யானையின் ஈர்ப்பால், அக்காவல் மரம், வேரற்று வீழ்ந்து போய் விடும் தம்மை மதியாத மன்னன் பால், இரவலர்களும், புலவர்களும் நடந்து கொள்ளும் இம் முறை, தமிழ்நாட்டில் நடைமுறையில் இருப்பதை உணர்ந்தவர் கோசர்.

பெருஞ்சித்திரனார் என்ற புலவர். இளவெளிமான் என்ற மன்னன்பால் சென்று பரிசில்வேண்டியபோது,அவன் அவரை மதிக்காது போகவே, சினங் கொண்ட புலவர். குமணன் பால் சென்று அவனைப் பாடிப் பரிசிலாக யானை ஒன்றைப்பெற்று, அதை இளவெளிமான் காவல் மரத்தில் பிணித்து விட்டு,"

"நின்னூர்க் கடி மரம் வருந்தத்தந்து யாம் பிணித்த நெடுநல்யானை எம் பரிசில்"[1] எனக்கூறி அறிவுறுத்திச் சென்று விட்டார்.

இந் நிகழ்ச்சியை அறிந்திருந்தனர் கோசர், அதனால் அகவல் மகளிர், அகுதை பால் பெற்று வந்த பிடியானை

கள் அனைத்தையும் கொண்டுபோய், நன்னன் காவல் மரமாம், அம் மரத்தில் பிணித்து விட்டு வந்து விடுமாறு, அகவல் மகளிரை வேண்டிக் கொண்டனர். அவர்களும் அது செய்து முடித்தனர். ஒரு யானையின் ஈர்ப்பிற்கே தாங்காது அம்மரம். அகவன் மகளிர் பிணித்த எண்ணிலாப் பிடிகள் அனைத்தும், ஒரு சேர ஈர்க்கவே, வேரற்று வீழ்ந்து விட்டது வீழ்ந்து பட்ட மரத்தை நாட்டவர் சூழ்ந்து கொண்டு, சிறு, சிறு துண்டுகளாக்கிக்கொண்டு சென்று விட்டனர்.

பெண் கொலை புரிந்த தன் கொடுமைக்குக் காரணமாக நின்ற தன் மாமரம், தன் கண் முன்பாகவே இவ்வாறு இல்லாமல் போனது கண்டு காலமெல்லாம் கலங்கலாயினான் நன்னன், அவ்வகையால், வாள் எடுக்காமலே, பெண் கொலைபுரிந்த நன்னனுக்குக் கொல்லாமல் கொல்லும் கொலை தண்டனையைத் தந்து விட்டனர் கோசர்.

தமிழக வரலாற்றில் கோசர் ஆற்றிய அரும்பணிகளில் இதுவும் ஒன்று. இவ்வரும் பணி அறியத் துணைபுரிவன கீழே கொடுத்திருக்கும், பரணர் பாக்கள் மூன்றும்.

1 "மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பிற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு, அவள் நிறை
பொன் செய்பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண் கொலை புரிந்த நன்னன்'[2]

2. "அகுதை பின்றை
வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்

மடப்பிடி பரிசில் மானப்
பிறிதொன்று குறித்து......'[3]

3. "நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போகிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கண் சூழ்ச்சி......'[4]

# சான்றெண் விளக்கம்

1. புறம்-162

2. குறுந்-292

3. குறுந்·298

4. குறுந்-73



# 7. ஊர் முது கோசரும் அன்னி மிஞிலியும்

நாடோடி வாழ்வினராய், மேலைக் கடலைச் சார்ந்த, தம் துளுநாடு முதல், கீழக் கடலைச் சார்ந்த செல்லூர் நியமம் வரை அலைந்து திரிந்த கோசர் இறுதியில் அந் நாடோடி வாழ்க்கையை வெறுத்து நிலைத்த குடியினராய் வாழத் தொடங்கினர். வேளாண் தொழிலை விரும்பி தமக்கு உரிய தொழிலாகக் கொண்டனர். நிலத்தைப் புண்படுத்தி உழுது பயறு விளைத்திருந்தனர்.

ஒரு நாள் அக்கோசர் நிலத்தில், அன்னி மிஞிலி என்பவளுடைய தந்தை மேய்த்து வந்த பசு ஒன்று புகுந்து பயறை மேய்ந்து விட்டது அஃதறிந்த அவ்வூர் முது கோசர் பெருஞ் சினம் கொண்டனர். அன்னி மிஞிலியின் தந்தை கண்களை அழித்துச் சிறுமை செய்தனர். முது கோசர் கொடுஞ் செயல் கண்டு கடுஞ்சினம் கொண்டாள் ; அன்னிமிஞிலி. ''என் தந்தையின் கண்களைப் போக்கிய கோசரைப் பழி வாங்குவேன். அவர்களை அழிப்பேன்'' என வஞ்சினம் உரைத்தாள்.

முதுகோசரை அழிக்கவல்ல திறன் கொண்டவன் அழுந்தூர் தலைவனாகிய திதியன் ஒருவன் தான் என்பதை அறிந்த அன்னி மிஞிலி அவன்பாற் சென்று தன் குறையுரைத்தாள். அன்னி மிஞிலியின் துயர் துடைக்க முன் வந்தான் திதியன். அவள் பொருட்டு அம் முது கோசரை வென்றான். அன்னி மிஞிலியின் தந்தைக்குக்

கொடுமை செய்தவர்களைக் கொன்றான். ஊர் முதுகோசரின் அழிவு கண்டு, தன் சினம் மாறி அக மகிழ்ந்தாள் அன்னி மிஞிலி.

இவ்வரலாற்று நிகழ்ச்சியினை அறிய நமக்குத் துணை புரிவன பரணர் பாடிய இப்பாடல்கள் இரண்டும் :

"முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கிப்
பகடு பல பூண்ட உழவுறு செஞ்செய்
இடுமுறை நிரம்பி ஆடுவினைக் கலித்துப்
பாசிலை அமன்ற பயறு ஆபுக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து, அருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்
கலத்தும் உண்ணாள்; வாலிதும் உடாஅள்;
சினத்திற் கொண்ட படிவம் மாறாள்;
மறங் கெழுதானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற்கு உரைத்து, அவர்
இன்னுயிர் செருப்பக் கண்டு சினம்மாறிய
அன்னி மிஞிலி"

—அகம்-262

2. "தந்தை
கண்கவின் அழித்ததன் தப்பல் தெறுவர
ஒன்று மொழிக் கோசர்க் கொன்று முரண்போக்கிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்"

—அகம்-196



# 8. திதியன்

திதியின் எனும் பெயருடையார் பலர் வாழ்ந்திருந்தன ராக, சங்க நூல்கள் கூறுகின்றன.

## 1. அழுந்தைத் திதியன் :

கோசர், நாடோடி வாழ்க்கையை விடுத்து நிலைத்த குடியினராய் வாழத் தொடங்கி காடுகளை அழித்துப்பண் படுத்தி; உழுது பயறு விளைத்திருந்தனர். அன்னி மிஞீலி எனும் பெயருடையாள் ஒருத்தியின் தந்தை அந்நிலத்தை அடுத்துள்ள இடங்களில் தன் பசுக்களை மேய விட்டிருந் தார். அப்பசுக்களில் சில கோசர்க்குரிய நிலத்தில் புகுந்து விட்டன. அச்சிறு குற்றத்திற்காக அன்னிமிஞிலியின் தந்தை கண்களை அழித்துச் சிறுமை செய்தனர் கோசர் கோசரின் அக்கொடுஞ் செயல் கண்டு சினம் கொண்ட அன்னி மிஞிலி, "என் தந்தையின் கண்களைப் போக்கிய அக்கோசர் உயிரைப் போக்காது, உண்ணலும் உண் ணேன். உடுத்தலும் செய்யேன்' என வஞ்சினம் உரைத்து, அவரை அழிக்க வல்லான் அழுந்தை வாழ் திதி யனே என அறிந்து, அவன் பாற் சென்று தன் குறை கூறினாள்.

திதியனும், அவள் பொருட்டு அத்தவறு செய்தாரைக் கொன்று முரண்போக்கினான். கோசர் அழிவு கண்டு அன்னி மிஞிலி அகமகிழ்ந்தாள்.

இவ்வாறு அன்னி மிஞிலிக்காகக், கோசரைக் கொன்ற அழுந்தை திதியன் ஒருவன். இவன் வரலாறு விளங்கத் துணை புரிந்தவர் பரணர். துணை புரிந்த பாக்கள் இவை;

1. ''பயறு ஆ புக்கென
வாய் மொழித் தந்தையைக் கண் களைந்து,
அருளாது
ஊர் முது கோசர் நவைத்த சிறுமையின்
கலத்தும் உண்ணாள்; வாலிதும் உடா அள்,
சினத்திற் கொண்ட படிவம் மாறாள்,
மறங்கெழு தானைக் கொற்றக் குறுப்பியன்
செருவில் நன்மான் திதியற்கு உரைத்து, அவர்
இன்னுயிர் செருப்பக் கண்டு சினம் மாறிய
அன்னி மிஞிலி''[1]

2. ''தந்தை
கண்கவின் அழித்ததன் தப்பல் தெறுவர்
ஒன்று மொழிக் கோசர்க் கொன்று முரண் போக்கிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்கிழை
அன்னி மிஞிலியின் இயலும்''[2]

அழுந்தைத் திதியன் கோசர் குலத்தவனா? ஆம் என்கிறார், திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951ல் வெளியிட்ட, 'கோசர்' எனத் தலைப்பிட்ட, தம்முடை சிற்றாராய்ச்சி நூலில்,

''குறும்பியனும், திதியனும், கோசரினமல்லாராயின் இங்ஙனம் எளிதில் ஒன்று மொழிக் கோசரைக் கொன்று முரண் போக்கலாகா தென்க. ஊர் முது கோசர் பிழை

யாதலால் இவ்வழக்கில் வேளிர் இடையிற்புக்குக் கொன்று முரண் போக்கல் இயலாதென்க. கோசர் அந்நியரால் கொல்லப்படத்தக்க எளியரல்லர் என்பதும் நினைக. இத் திதியன் அழுந்தை சோணாட்டு வேளிர் இருந்த அழுந் தூரின் வேறாய்க் குடமலை நாட்டிலிருந்த ஊராமென்க'[3] என்றெல்லாம் கூறியிருப்பது காண்க.

அழுந்தைத் திதியன் கோசர் குலத்தவன் என்பதற்குத் திருவாளர் அய்யங்கார் காட்டும் முதற் காரணம், 'குறும் பியனும், திதியனும் கோசரினமல்லராயின், கோசரைக் கொன்று முரண் போக்கல் ஆகாது. கோசர் பிழை, ஆக வே, இதில் வேளிர் இடைபுக்கு முரண் போக்கல்இயலாது' என்பது.

பாழிநகர் வேளாம் நன்னனுக்காக, அவன் பகைவன் மிஞிலியொடு போரிட்டு உயிர் துறந்தான் ஆஅய் எயினன் என்ற வேளிர் குலத்தவன் அவன் இறந்தமையால், அவன் உரிமை மகளிர் துயரைக் களைய வேண்டியது நன்னன் கடமை. ஆனால், அவன் அது செய்யாத போது அம் மக ளிர் துயரைத்துடைத்தான் அகுதை என்பான் தான் செய்ய வேண்டியதை இவன் செய்வதா என, அகுதைபால் சினம் கொண்டு நன்னன் அவனை அழித்து விடுவனோ என அஞ்சி அகுதையை அரண்மிக்க இடத்தே வைத்துக் காத்த தோடு அந் நன்னன் காவல் மரமாம் மாவையும் வெட்டி வீழ்த்தினர் கோசர்.

ஈண்டு, வேளிர்களுக்குள் ஆன பூசலில், கோசர் தலை யிட்டு ஒரு முடிவு கண்டனர். ஆக ஓரினத்துக்குள் உள் ளாகும் பூசல் அவ்வினத்தாருக்குள்ளேதான் தீர்க்கப் படும் என்ற வாதத்தில் வலுவில்லை.

திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் கூறும் இரண்டாவது காரணம் கோசர் அந்நியரால் கொல்லப்

படத்தக்க எளியர் அல்லர் என்பது. இது கூறும் இவரே அதே நூலில் பிறிதோரிடத்தில், "சோணாட்டில் இவர் (கோசர்) வலிபெற்று வீறுதலைக் கண்டு பொறாது கிள்ளி வளவன் இவர் படையைச் சிதற அடித்தனன்'[4] என்றும் கூறியுள்ளார். ஆக இரண்டாவது காரணமும் பொருந்தாது.

மூன்றாவது காரணம், கோசர் முரண் போக்கிய திதியனுக்கு உரிய அழுந்தை வேறு, வேளிர்க்கு உரிய அழுந்தை வேறு, என்பது இது கூறிய அவர், தம் கூற்றிற்கான அகச் சான்று எதையும் காட்டினாரல்லர்; ஆகவே அது எடுபடாது.

ஆக, அழுந்தைத் திதியன் கோசர் இனத்தவன் என்பதற்கு திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள்காட்டும் காரணம் எதுவும் ஏற்புடையன அல்ல; திதியன் கோசர் குடியினன் அல்லன்.

## 2. பொதியில் திதியன் :

தன்னோடு போரிட வருவார் தம் பேராண்மையைத் தன் வில்லாண்மையாலும் பகைவர்களின் யானைப் படையைத் தன் வேற்படையாலும் அழிக்க வல்லவனும் பொன்னாலான தேர் பல உடையவனும், பொதியிலை ஆண்டிருந்தோனுமாகிய திதியன் ஒருவனையும் சங்கப் பாடல்கள் அறிமுகம் செய்துள்ளன. அப்பாடல்கள் வருமாறு;

"பொருநர்,

செல்சமம் கடந்த வில் கெழு தடக்கைப்
பொதியிற் செல்வன், பொலந்தேர்த் திதியன்"[5]

—ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன்.

"களிறு கண் கூடிய வாள் மயங்கு ஞாட்பின்
ஒளிறு வேல்தானைக் கடுந்தேர்த் திதியன்
...............................................................
புகலரும் பொதியில்"[6]

— பரணர்

பொதியில் திதியன் கோசர் மரபினனா? ஆம் என்கிறார் திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் தம்முடைய 'கோசர்'-ஓர் சிற்றாராய்ச்சி என்ற நூலில், திதியன்' என்ற தலைப்பின் கீழ்,'[7] இவன் பூதப்பாண்டியன் பாடிய அகப்பாட்டில்,

"பொருநர்,

செல்சமங் கடந்த வில் கெழு தடக்கைப்
பொதியிற் செல்வன் போலத் தேர்த்திதியன்
இன்னிசை யியத்திற் கறங்கும்
கன் மிசை யருவிய காடிறந்தோரே"[8]

என வருதலால், பாண்டியர்க்குத் துணையாவான் எனத் துணியப்படும் இவன் வேளிருள் ஒருவனான திதியனின் வேறாவனென்பது,

"நாளவையிருந்த நனைமகிழ்த் திதியன்
வேளிரொடு பொரீஇய கழித்த
வாள்வாயன்ன வருஞ்சுர மிறந்தே"[9]

என்பதனாலறியலாம். இதன் கண் திதியன் வேளிரொடு பொருதற்கு உறை கழித்த வாளுடைமை கூறியதனால், இவன் வேளிருள் ஒருவனாகானென்று கொள்க என்று கூறியுள்ளார். இவ்வாறு கூறியிருப்பதன்மூலம், "பொதியில் திதியன் வேளிர் அல்லன்; ஆகவே, அவன், கோசர் மரபினன்" எனக் கூறாமல் கூறி முடிவு கட்டியுள்ளார்.

'பொதியில் செல்வன்; பொலத் தேர்த்திதியன்'' என்ற வரி, திதியன் என்பான் ஒருவன் பொதியிலில் வாழ்ந்திருந் தான் எனக் கொள்ளத்தான் துணை புரியும். அவனை, ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் பாடினார்[10] என்பதால் அவனைப் பாண்டியர்குத் துணையாவான் எனல் பொருந் தாது. அப்பொதியில் திதியனைப் பரணரும் பாடியுள்ளார்[11] திருவாளர் அய்யங்கார் அவர்கள் அப்பாட்டைச் கண்டு கொள்ளவே இல்லை.

வேளிரொடு போரிட்ட திதியன் ஒருவனைமாமூலனார் அறிமுகப் படுத்தியுள்ளார். அது, இது;

> "நாளவை இருந்த நனைமகிழ்த் திதியன்
> வேளிரொடு பொரீஇய கழித்த
> வாள்''[12]

இதில்' வேளிரொடு போரிட்ட அத்திதியனின் வாள் வன் மைதான் கூறப்பட்டுள்ளது. இத் திதியனுக்கும் பொதியில் திதியனுக்கும் உள்ள உறவு, உறவின்மை எதுவும் கூறப் படவில்லை. அங்ஙனமாகவும்' இவன் பொதியில் திதிய னின் வேறாவன் என்பது, "வேளிரொடு பொரீஇய' [12] என்பதால் அறியலாம் என்பது பொருந்தாது.

தமிழகத்தில், வேளிர், கோசர் தவிர்த்து, வேறு பிற இனத்தவரும் இருந்தனர். ஆகவே.

ஆகவே, 'வேளிர் அல்லன்; ஆகவே கோசன்' என்ற வாதம், வாதநெறியொடு பட்டது ஆகாது; பொதியில் திதியன் கோசன் அல்லன்.

## 3. தலையாலங்கானப் போர்த் திதியன் :

பாண்டியன் நெடுஞ்செழியன் பால், தலையாலங் கானப் போரில் தோல்வி கண்டவர்கள், சேரன், சோழன் உள்ளிட்ட எழுவராவர் என்கிறார் நக்கீரர்.

"செழியன்
ஆலங்கானத்து அகன் தலை சிவப்பச்
சேரல், செம்பியன், சினங்கெழுதிதியன்
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி
நாரரி நறவின் எருமை யூரண்,
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான், இயல் தேர்ப் பொருநன்
என்று
எழுவர் நல்வலம் அடங்க"

என்கிறது அப்பாட்டு.[14]

அழுந்தைத் திதியனையும், பொதியில் திதியனையும், கோசர் குலத்திற்குக் கொண்டுபோய் விட்ட திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் தலையாலங்கானப் போர்த் திதியனை வேளிர் குலத்திற்கு வரவேற்றுள்ளார். தம் 'கோசர்' என்ற நூலில், தலையாலங்கானத்துப் போரில் பாண்டியற்குப் பகையால் எதிர்த்து நின்ற ஐம் பெரும் வேளிருள் திதியன் என்ற பெயருடையானும் ஒருவன்'[45] எனக் கூறியுள்ளார்.

இத்திதியன் அவர் கூறுமாறு வேளிர் குலத்தவனா? பாட்டில் அந்த ஐவர் எவ்வாறு குறிப்பிடப் பட்டுள்ளனர்; காண்போம்; அந்த ஐவராவர் 1. சினங்கெழு திதியன், 2. பொலம் பூண் எழினி, 3. எருமை ஊரன், 4. இருங்கோ வேண்மான், 5. இயல் தேர்ப் பொருநன். இவர்கள் ஐவருமே வேளிர் என்றால், இருங்கோ வேண்மான் மட்டும் தனியே பிரித்து வேண்மான் அதாவது வேளிர் குலத்தவன் எனக்கூறத் தேவை இல்லை. பிரித்துக் கூறப்பட்டுள்ளான், ஆகவே அவனை ஒழித்த நால்வர் வேளிர் அல்லர் என்பது தானே போதரும்.

மேலும் ஏனைய நால்வரில் எருமை யூரனும் ஒருவன். அவன் வேளிர் அல்லன், பண்டு மகிஷதேசம் என வழங்கப் பட்ட மைசூர் நாட்டைச் சேர்ந்தவன். அவன் தோல்வி யுற்ற, தலையாலங்கானப் போர் பாடிய நக்கீரரே, பிறிதொரு பாட்டில், அவன் ஒரு வடுகர் தலைவன், எருமை நாட்டான் அயிரை ஆற்றை எல்லையாகக் கொண்ட நாடுடையான் என விளக்கமாகக் கூறியுள்ளார்; அப்பாட்டு இது தான்;

"வன்தோள் வடுகர் பெருமகன்
பேரிசை எருமை நன்னாட்டு உள்ளதை
அயிரியாறு"[16]

உண்மை நிலை இதுவாகவும், தலையாலங்கானப் போரில் பங்கு கொண்ட ஐவரும் வேளிர்; அவர்களுள் ஒருவனாகிய திதியனும் ஒரு வேள், எனல் பொருந்தாது அவன் எக்குலத்தவனோ. திதியன் எனப் பெயர் கொண்ட பலருள் ஒருவன் அவ்வளவே.

# சான்றெண் விளக்கம்

1. அகம்-262
2. அகம்-196
3. பக்கம்-39
4. ரா. இராகவையங்கார், கோசர், 1951-பக் 11
5. அகம்-25
6. அகம்-322
7. பக்கம்-36
8. அகம்–25
9. அகம்–331
10. அகம்-25
11. அகம்–322
12. அகம்–331
13. மேலது
14. அகம்-36
15. பக்கம்–36
16. அகம்-253



# 9. பழையன் மாறனும், மதுரையும்

"பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும் பெயர் மாறன் தலைவன் ஆகக்
ஏந்தகு வாய்வாள் இளம்பல் கோசர்
இயல்நெறி மரபின் வாய்மொழி கேட்ப"

—மதுரைக் காஞ்சி-771–76

"வாய்மொழி நிலைஇய சேண் விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி"

—அகம் 205–நக்கீரர்

"நெடுநகர்,
இழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்
வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த
கிள்ளி வளவன் நல்லமர் சாஅய்க்
கடும்பரிப் புரவியொடு களிறு பல வவ்வி
ஏதில் மன்னர் ஊர் கொள"

—நக்கீரர்–அகம்-346

இம் மூன்று அகச் சான்றுகளிலிருந்து, "கோசர் தலைவனாகிய பழையன் மாறன், பாண்டியர் படைத்தலைவனாய், அப்பாண்டியர் தலைநகர் கூடல் நகரைக் காத்திருந்தான் அப்போது, வெள்ளம் போல் பரந்த பெரும் படையுடைய,

'கிள்ளி வளவன்' எனவும், 'பொலம்பூண் கிள்ளி' எனவும் அழைக்கப்படும் ஒரு சோழ அரசன், கோசர் படையை அழித்துக் கூடலைக் கைப்பற்றிக் கொள்ளும் கருத்தோடு அக் கூடலை வளைத்துப் பெரும் போர் புரியத் தொடங்கினான். அது கண்டு கடுஞ்சினம் கொண்ட பழையன், தன் களிற்றுப் படையோடும் புறம் போந்து கிள்ளி வளவனை வளைத்துப் போரிட்டான்.

பழையன் பேராண்மையை எதிர்த்து நிற்கும் ஆற்றல் இழந்து தோற்று ஓடினான் கிள்ளி. அக்கிள்ளி வளவனுக்கு உரிய களிறுகளையும், குதிரைகளையும் கணக்கில கைப்பற்றிக் கொண்டான் பழையன். அம்மட்டோடு அமையாது பாண்டி நாட்டை அடுத்திருந்த கிள்ளி வளவனுக்கு உரிய நல்ல ஊர்கள் பலவற்றையும் கைப்பற்றிக் கொண்டான் பழையன்' என்ற இவ்வளவே பெறக்கூடிய செய்திகளாம்.

கூறிய அகச் சான்றுகள் மூன்றிலிருந்து பெறலாவது இதுவே ஆகவும், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு தொகுத்து தமிழ் வளர்ச்சி இயக்கத்திற்காக 1983ல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்ட, 'தமிழ்நாட்டு வரலாறு சங்க காலம்-அரசியல்' என்ற நூலில், பாண்டியர் வரலாறு எழுதியுள்ள ஆராய்ச்சிப் பேரறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள், 'பழையன் மாறன்' என்ற தலைப்பின்கீழ்,

"கிள்ளி வளவன் என்ற சோழ அரசன் மதுரையில் வெற்றி பெற்ற செய்தி நமக்கு ஒரு வரலாற்றுத் தொடர் நிகழ்ச்சியை உய்த்துணர உதவி செய்கிறது. ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் செங்குட்டுவன் காலத்தவன். கோவலனது கொலையால் இவன் தன் அரியணையிலிருந்து வீழ்ந்து இறந்தான். பிறகு பழையன் மாறன் மதுரையில் செல்வாக்குப்பெற முனைந்தான். அந்த முயற்சியில் சோழன் கிள்ளி வளவன் வெற்றி பெறவே, மதுரை சோழர்

வசம் ஆகி விட்டது. பழையன் மாறன், பின் மோகூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வரலானான். சோழன் கிள்ளிவளவன், பசும்பூண் பாண்டியன் என்பவனைப் பாண்டி நாட்டிற்கு அரசனாகச் சிலகாலம் ஆண்டு வரச் செய்தான்.

பசும் பூண் பாண்டியன் சோழருக்கு உட்பட்டு அவர்களுக்குத் திறை செலுத்திக் கொண்டு நாட்டை ஆண்டு வந்திருக்கலாம். இந்நிலை பாண்டியரின் விடுதலை உணர்வைத் தூண்டித் தன்னாட்சி பெறும் மனப்பான்மையை வளர்த்தது. இந்த உயர்வே வெற்றி வேற் செழியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்ற நிலையில் நமக்கு அறிமுகமாகி, மதுரையை ஆண்ட நிகழ்ச்சியில் முடிந்தது''[1] - என்றெல்லாம் அகச் சான்றுஎதுவும் காட்டாது அகச்சான்றுஅளிக்கும் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு முரணான செய்திகளைக் கூறியிருப்பது வருந்துதற்குரிய ஒன்று.

கிள்ளி வளவன் என்ற பொலம்பூண் கிள்ளிக்கும், பழையன் மாறனுக்கும், கூடல் நகர் அருகே நடைபெற்ற போரே, தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் காலத்தில் தான் நடந்தது. அங்ஙனமாகவும், அவனை அப்போருக்கும் பிற்பட்டவனாகக் காட்டியிருப்பது சரியான வரலாற்று ஆய்வு முடிவு அல்ல.

பழையன் மாறன், தலையாலங்காலத்தவனின் படைத் தலைவன் என்பதை திரு. மயிலை. சீனி. வேங்கடசாமியவர்களே ஒப்புக் கொண்டுள்ளார். அதே கட்டுரையின், இரண்டாம் அடிக்குறிப்பில் "பழையன் மாறன் என்னும் பெயர் கொண்ட ஒருவன் பாண்டியன் தலையாலங்கானத்

துச் செருவென்ற நெடுஞ்செழியன் படைத்தலைவனாக விளங்கினான்''[2] எனக் கூறியிருப்பது காண்க.

அவ்வாறு கூறியவர், அடுத்து ''இவனுடைய பெயரிலிருந்து மோகூர் அரசன் பழையனின் மகனாக இருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது''[3] எனக் கூறி, பழையன் மாறனுக்கு இல்லாத ஒரு மகனைப் பெற்றுத் தந்துள்ளார்.

# சான்றெண் விளக்கம்

1. பக்கம் 367-368
2. பக்கம் 368
3. மேலது.



# 10. தழும்பன் கோசர் மரபினனா ?

தழும்பன் வரலாறு அறியத் துணைபுரிவன கீழே வரும் பாக்கள் மூன்றும்; அவற்றுள் முதல் இரண்டும் பரணர் பாடியவை; மூன்றாவது நக்கீரர் பாடியது.

1. "வெண்ணெல் அரிஞர் தண்ணுமை வெரீஇக்
கண்மடற் கொண்ட தீந்தேன் இரியக்
கள்ளரிக்கும் குயம்; சிறுசின்
மீன்சீவும் பாண்சேரி
வாய்மொழித் தழும்பன் ஊணூர்"

—புறம்: 348

2. நெய்வார்ந்தன்ன துய்யடங்கு நரம்பின்
இருபாண் ஒக்கல் தலைவன்; பெரும்பூண்
ஏஎர் தழும்பன் ஊணூர் ஆங்கண்
பிச்சை சூழ் பெருங்களிறு'

—நற்றிணை-300

3. 'வாய்வாள்
தமிழகப் படுத்த இமிழ் இசை முரசின்
வருநர் வரையாப் பெருநாள் இருக்கைத்
தூங்கல் பாடிய ஓங்கு பெரு நல்லிசைப்
பிடிமிதி வழுதுணைப் பெரும் பெயர்த் தழும்பன்
கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்
விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்

இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து
எல்லுமிழ் ஆவணம்'

— அகம் 227.

இப் பாடல் மூன்றாலும் நாம் அறியக் கூடியதெல்லாம், 'வாணிய வளத்தால் சிறந்தது கடற்கரை நகராகிய மருங்கூர்ப்பட்டினம். அவ்வூரை அடுத்து ஊணூர் என்றோர் ஊர் இருந்தது. அது நீர்வளமும், நில வளமும் நிறையக் கொண்டது. வயலில் விளைந்து முற்றிய வெண்ணெல் அரிபவர் அரியப் புகுமுன், அவ் வயலில் கூடுகட்டி வாழும் புள்ளினங்களை, ஊறுசெய்யாது ஓட்டக்கருதித் தண்ணுமை முழக்குவர்; அவ் வயலருகே, வானுற ஓங்கி வளர்ந்திருக்கும் தென்னை முதலாம் மரங்களில் கூடிகட்டி வாழும் தேனீக்கள், அத்தண்ணுமை ஒலி கேட்டு அஞ்சித் தம் கூடுவிட்டுப் பறந்தோடிவிடும். தேனீக்கள் இல்லாத தேன் கூடு பற்றுவதற்கு எளிதாதல் அறிந்த அவ்வூர் வாழ்குயவர் அத்தேன் கூடழித்துத் தேன் கொள்வர். அவ்வூர்ப் பாண்சேரி வாழ் பாணர், சிறுவலை கொண்டு, சிறுமீன் பிடித்து உண்டு மகிழ்வர். அவ்வூரைச் சூழ, நெடிய பெரிய மதில் அமைந்திருந்தமையால், ஊணூர் அரிய காவலையும் கொண்டிருந்தது.

அவ்வூணூர்க் கண், கொடையும், கொற்றமும் குறைவறப்பெற்ற குருசில் ஒருவன் வாழ்ந்திருந்தான் வாட்போர் வல்லனாய அவன், தான் மேற்கொண்ட போர் ஒன்றில் பெண் யானையால் மிதியுண்டு பெருப்புகழ் பெற்றான். அப்புண் தந்த தழும்பு, பெரிய வழுதுணங்காய் அளவு பெரிதாதல் கண்ட மக்கள், அவனை வழுதுணைத் தழும்பன் என்றும், அடைகொடாது, தழும்பன் என்றும் பெயரிட்டுப் பாராட்டினர். வாட்போல் வல்லனாய அவன், என்றும் வாய்மையே வழங்கும் வழக்கம் உடையவன் தன்னைப் பாடிவரும் பாணர் முதலாம் இரவலர்க்கு வரையாது

வழங்கும் நாளோலக்கச் சிறப்புடையான். பாணர் முதலாம் இரவலர்க்கு, அவர் வேண்டும் பொருள்களோடு, களிறுகளையும் வழங்குவன். அதனால் அவ்வூணூரில் எங்கு காணினும், அவன் கொடுத்த களிறுக் கூட்டத்தைக் காணலாம்.

வாட்போர் வன்மையாலும், வரையாது வழங்கும் வள்ளன்மையாலும், வாய்மையுடைமையாலும், அவன் புகழ், தமிழ்நாடு முழுவதும் சென்று பரந்தது. அவன் அத்தகு பெரும் புகழ் உடையனாதலை அறிந்த புலவர்கள் பல்லோர், அவனைப் பாராட்டியுள்ளனர். அவ்வாறு பாராட்டிய புலவர்களுள் தூங்கலோரியார் என்ற பழம் பெரும் புலவரும் ஒருவர், ஆவர் எனப் புகழ்ந்துள்ளார். பெரும் புலவர் நக்கீரர். இவ்வளவே!

இம் மூன்று பாடல்களைமட்டுமே அகச்சான்றுகளாகக் கொண்டு திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள், தழும்பன், கோசர் குலத்தவன் என முடிவு செய்துள்ளார் அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951ல் வெளியிட்ட 'கோசர்' எனத் தலைப்பிட்ட, அவருடைய ஒரு சிற்றா ராய்ச்சி நூலில், "இவன், பாண்டி நாட்டு மருர்கூர்ப் பட்டினத்தையடுத்த ஊணூரிலிருந்த கோசர் பெருவீரன்" என்றும் "கோசர் பாண்டியர்க்கு உறுதுணையாதல் மதுரைக்காஞ்சியடிகளைக் காட்டி முன்னரே விளக்கி னேன்"[2] என்றும், "இவன் வாய்மொழியிற் சிறந்த கோசர் குடியினனாதல் அறியலாம்"[3] என்றும், "இக் கோசகுலம் எதிர்த்த படையில் யானையையல்லது எறியோம் என்று திவ்ய சபதஞ் செய்து ஹஸ்திகோசம் என்னும் ஒரு குழுவா கவும்...வழங்கப்படும்"[4] என்றும் கூறியுள்ளார்.

தழும்பன். கோசர் குலத்தவன் என்பதற்கு திருவாளர் இராகவையங்கார் கூறும் காரணங்களை நிரலே ஆராய்

வாம் முதல் காரணம்: தழும்பன், பாண்டி நாட்டு மருங் கூர்ப் பட்டினத்தை அடுத்த ஊணூரில் இருந்தவன் ஆகவே கோசர் மரபினன் என்பது, அவர் கூற்றை ஏற்றுக் கொள்வதாயின் பாண்டி நாட்டு ஊர்களில் வாழ்பவர் அனைவரும் கோசர் ஆதல் வேண்டும். இது வாத நெறியாகாது.

இரண்டாவது காரணம், 'கோசர் பாண்டியர்க்கு உறு துணையாதல் மதுரைக் காஞ்சி அடிகளைக்[5] காட்டி முன்னரே விளக்கியுள்ளேன்'[5] என்பது. கோசர் பாண்டியர்க்கு படைத்துணை அளித்தனர் என்பது உண்மை; மோகூர் மன்னன் பழையன் மாறன் தலைமையில் கோசர் படையொன்று பாண்டி நாட்டில் ஒரு காலத்தில் இருந்தது என்பது உண்மை. பாண்டியர்க்குப் படைத் துணை அளிப்பவர் எல்லாம் கோசர் ஆகிவிட முடியாது.

பாண்டி நாட்டில் அருப்புக் கோட்டையை அடுத்து நாலை என்றோர் ஊர் இருந்தது. இப்போது அது நாலூர் என வழங்குகிறது. அவ்வூரில் நாகன் என்பான் ஒருவன் உரிமை பூண்டு வாழ்ந்திருந்தான். அவன் பாண்டியர்க்குப் படைத்துணை வேண்டியிருக்கும்போது வாட்படை வழங்குவன். நல்லரசு நடத்த வேண்டியபோது அதற்கு வேண்டும் அரசியல் அறநெறி அறிவுரைகளை வழங்குவன்.[7] ஆகவே, அவனைக் கோசர் குலத்தவன் எனக் கூறிவிடுவதா? அவன் கோசர் மரபினன் அல்லன் நாகர் மரபினன் என்பதை நாகன் என்ற அவன் பெயரே உறுதி செய்கிறது. ஆகவே பாண்டியர்க்குப் படைத்துணை அளித்தனர், ஆகவே கோசர் என்பதும் பொருந்தாது.

கோசர், பாண்டியர் படையில் பணி புரிந்திருக்கலாம். அதற்கும் தழும்பனுக்கும் என்ன தொடர்பு? இல்லாத தொடர்பை உண்டாக்க திருவாளர் இராகவையங்கார்

முயன்றுள்ளார். 'பிடி மிதி வழுதுணை பெரும் பெயர்த் தழும்பன்'[8] என்ற வரியில் உள்ள 'வழுதுணை' என்ற சொல்லின் இடத்தில், 'வழுதி துணை' என்ற சொல் இருந்ததாகத் தாம் ஒரு பிழை செய்து விட்டு'[9] 'வழுதி துணை என்ற பாடல் எழுதினர் வழுவே துணைக் கொண்டு வழுதுணை யென வரையப் பட்டதுவேறு. வேறு பொய்ப் பொருள் கோடற்குக் காரணமாயிற்றென்க'[10] என பிறர்மேல் பழி போட்டுள்ளார். 'வழுதி துணை' எனக் கொண்டால், தளை கெட்டும் போவதோடு, பொருட் சிதைவும் நேர்வதை, அவர் நினைவில் கொண் டிலர் போலும் !

அவன் 'வாய்மொழித் தழும்பன்'[11] என அழைக்கப்பட்டி ருப்பது அடுத்தகாரணம், வாய்மொழி கோசர்க்கு மட்டுமே உரிமையுடைய ஒன்றன்று' சாரணர்க்கும், வார்த்திகனுக் குய் உரிமையுடையது அது என்கிறார் இளங்கோ அடிக ளார்.'சாரணர் வாய்மெழி'[12] 'வார்த்திகன் கொணர்ந்த வாய்மொழி'[13] என்பன காண்க. வாய் மொழியாளர் என்ற பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வாய்மொழி கேட்டு அதன்வழி நடப்ப வர் என்கிறார் மதுரைக்காஞ்சி ஆசிரியர் மாங்குடிமருதனார் "கோசர் இயல் நெறி மரபின் நின் வாய்மொழி கேட்ப"[14] என்ற வரியினைக் காண்க ஆகவே அதுவும் பொருந்தும் காரணம் ஆகாது.

தழும்பன் வேழம் மிதித்த தழும்பு உடையான், வேழத் தின் மீதல்லது வாள் எடோம் என்பது கோசர் கொள்கை: ஆகவே தழும்பன் கோசர் மரபினன் என்பது திருவாளர் அய்யங்கார் அவர்கள் எடுத்து வைக்கும் இறுதிக்காரணம்.

போர்க்களத்தில், யானையை, அதிலும் ஆண் யானையை, அதிலும் பகைவேந்தன் ஊர்ந்துவரும் யானை

யைத் தேடிப் போர் தொடுப்பது, கோசர் குலத்தவர்க்கு மட்டுமே தனி உரிமை உடைய ஒன்று அன்று. அது களம் புகும் காளையர் அனைவர்க்கும் உரிய தனிச் சிறப்பாம்.

“களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே”[15] என்கிறார் பெண்பால் புலவர் பொன்முடியார். “வேந்தூர் யானைக் கல்லது, ஏந்துவன் போலான் தன் இலங்கு இலை வேலே”[16] என்கிறார் ஆவூர் மூலங்கிழார்.

“மடப்பிடி புலம்ப,இலங்கு மருப்பு யானை எறிந்த எற்கு”[17] என்கிறார் எருமை வெளியனார்; “எஃகம், வேந்தூர் யானை ஏந்து முகத்ததுவே”[18] என்கிறார் கோவூர் கிழார் “கறையடி யானைக் கல்லது, உறை கழிப்பு அறியான் வேலோன்”[19] என்கிறார், பெயர் அறிய மாட்டாப்புலவர் ஒருவர். ‘பெரும் சமத்து அண்ணல் யானை அணிந்த பொன்செய் ஓடைப் பெரும் பரிசிலனே”[20] என்கிறார் தண் கால் பொற்கொல்லனார், ‘இருங்கடல் தானை வேந்தர் பெருங்களிற்று முகத்தினும் செலவானாதே”[21] என்கிறார் விரியூர் நக்கனார். “யானை ஒருகை உடையது; எறிவ லோயானும் இருகை சுமந்து வாழ்வேன்’[22] என்கிறது தொல்காப்பிய மேற்கோள் செய்யுள் ஒன்று.

மேலே கூறிய இவ் வகைச் சான்றுகள் எல்லாம், களிறு எறிதல், களம் புகும் காளையர்க்கெல்லாம் பொது இயல்பு என்பதையே உறுதி செய்கின்றன; கூறிய அகச்சான்று எதிலும், அவ் வீரர், கோசர் என ஓரிடத்தும் கூறப்படா மை காண்க. ஆக, களிறு எறிதல் ஒன்றைக் கொண்டு தழும்பன் கோசர் குலத்தவன் எனக் கொள்வதும் பொருந் தாது.

எனவே, ஊணூர்த் தழும்பன் ;கோசர் மரபினன் என்பதற்குத் திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள்

எடுத்து வைத்த காரணம் எதுவும் ஏற்புடையது அன்று, தழும்பன் கோசர் இனத்தவன் அல்லன்.

மேலும், தழும்பன் கோசர் மரபினன் அல்லன் என்ற இம்முடிவை சென்னை அருணா பப்ளிகேஷன்ஸ் 1960ல் வெளியிட்ட 'தமிழகத்தில் கோசர்கள்' என்ற என் நூலில், 'பரணர் அவனை (தழும்பன்) வாய் மொழித் தழும்பன்'[23] எனச் சிறப்பித்து அழைத்துள்ளது ஒன்றையே கொண்டு இவனையும் கோசனாக்கி விடுவர் சில வரலாற்று ஆசிரியன்மார்'[24] என எழுதி அன்றே கூறியுள்ளேன்.

# சான்றெண் விளக்கம்

1. ரா. இராகவையங்கார், கோசர், 1951 பக்-43

2. மேலது பக்கம்–45

3, மேலது பக்கம்–45

4, மேலது பக்கம்–49

5. மதுரைக் காஞ்சி : 770-79; 507–510

6. 'கோசர்' 1951, பக்கம்-14-15

7. ''பாண்டியன் மறவன்
படை வேண்டுவழி வாள் உதவியும்
வினை வேண்டுவழி அறிவு உதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் தேஅத்து
அசைநுகம் படாஅ ஆண்டகை உள்ளத்துத்
தோலா நல்லிசை நாலை கிழவன்''
—புறம்-179

8. அகம்–227

9. ரா. இரர்கவையங்கார், கோசர், 1951, பக்கம்-44

10. மேலது பக்கம்-45

11. புறம்-348

12. சிலம்பு 10–192

13. சிலம்பு 25–114

14. மதுரைக் காஞ்சி–774

15. புறம்-312

16. புறம்-301

17. புறம்-303

18. புறம்–308

19. புறம்-323

20. புறம்-326

21. புறம்-332

22. தொல் புறம்-சூம் மேற்கோள்செய்யுள்

23. புறம்-348

24. புலவர். கா. கோவிந்தன், தமிழகத்தில் கோசர்கள், 1960; பக்கம்-104



# 11. ஆதன் எழினி கோசர் குலத்தவனா?

தமிழ் நாட்டைச் சேர, சோழ, பாண்டியர் போலும் மூவேந்தர்கள் மட்டுமே அல்லாமல் பாரி, காரி, ஓரிபோலும் வள்ளல்கள் எழுவர்களும், அகுதை, அதியன் போலும் எண்ணிலாக் குறுநிலத் தலைவர்களும் ஆண்டு வந்துள்ள னர். அவ்வாறு ஆண்டுவந்தாருள் ஆதன் எழினி என்பா னும் ஒருவன். அவன் வரலாறு அறியத் துணைபுரிவன:

"கெடா அத்தீயின் உருகெழு செல்லூர்க்
கடாஅ யானைக் குழூஉச் சமம் ததைய
மன் மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
முன் முயன்று அரிதினின் முடித்த வேள்வி.''

—அகம் ; 220

"அருந்திறல் கடவுள் செல்லூர்க் குணா அது
பெருங்கடல் முழக்கிற்று ஆகி, யாணர்
இரும்பு இடம் படுத்த வடுவுடை முகத்தர்
கடுங்கண் கோசர் நியமம்''

— அகம் : 90

"கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி உழவர் குற்ற குவளையும்
கடிமிளைப் புறவில் பூத்த முல்லையொடு
பல் இளங்கோசர் கண்ணி அயரும்
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்

எறிவிடத்து உலையாச் செறிசுரை வென்வேல்
ஆதன் எழினி அருநிறத்து அழுத்திய
பெருங்களிற்று எவ்வம்'

— அகம்;216

இவற்றுள் முன்னைய இரண்டும் மதுரை மருதன் இளநாகனார் பாடியவை; மூன்றாவது ஐயூர் முடவனார் பாடியது.

இப் பாக்கள் மூலம் அறியக் கூடியன எல்லாம்; 'சோழ நாட்டில், கிழக்குக் கடற்கரையை அடுத்துள்ள பட்டினங்களுள் செல்லூர், என்பதும் ஒன்று அச் செல்லூர் மன்னர் குலம் மண்மேடு இட்டுப்போக முயன்ற மழுவாள் நெடியோனாம் பரசுராமன் வேள்வி செய்த விழுச் சிறப்புடையது; வேள்வித் தீயால் விழுப்புகழ் பெற்ற அப்பேரூர், அருந்திறல் கடவுளர் நின்று காக்கும் அருமை யுடையது, அச் செல்லூர்க்குக் கிழக்கே, கடல் அலை ஒலிக்கும் நியமம் எனும் நகர் ஒன்று உண்டு. அந் நியமப் கோசர் என்பார்க்கு உரித்து. நியமத்தை வாழிடமாகக் கொண்ட கோசருள், இளையராயினார் செல்லூர்க்கு அணித்தே வந்து ஒன்று கூடியிருந்து கடலாடு மகளிர் கொய்து தந்த புலி நகக் கொன்றை கழனி உழவர் பறித்துத் தந்த குவளை, காவற் காட்டில் தானே மலர்ந் திருக்கும் முல்லை ஆகிய மலர்களைத் தலைமாலையாம் கண்ணியாகக் கட்டி அணிந்து ஆடி மகிழ்வர்;

அச் செல்லூரை உரிமை பூண்டு ஆண்டிருந்தான், ஆதன் எழினி என்பானொரு பெருவீரன். அவன் யானைப் போர் வல்லன் களிற்றின் மீது வேல் எறியும் வீரம் மிக்கோன் அவன் எறிந்த வேல் ஏற்ற களிறுகள் கடுந்துயர் உற்றுக் கலங்கி அழியும்'[1] என்ற இவ்வளவே, ஆதன் எழினி குறித்தும், அவனுக்கு உரிய செல்லூர் குறித்தும் அறியத் தக்கன இந்துணையவே.

இப் பாக்களையே[2], துணையாகக் கொண்டு ஆதன் எழினி கோசர் இனத்தவன் ஆவன் என்பவர் வரலாற்று ஆய்வாளர் சிலர் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1951ல் வெளியிட்ட 'கோசர்' என்ற தலைப்பிட்டத் தம் சிற்றாராய்ச்சி நூலில் திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள்,

'இதன் (அகம் 216) கண், கோசர் கண்ணியயரும் செல்லிக் கோமான் ஆதனெழினி என்பதனால் இவன் கோசர் தலைவனாகக் கருதப்பட்டான் [3] எனக் கூறியிருப்பது காண்க.

ஆதன் எழினி என்ற இவன் பெயரில்இருபெயர்ச்சொற்கள் இடம்பெற்றுள்ளன. 'ஆதன்' என்பது ஒன்று, 'எழினி என்பது இரண்டு.

இவற்றுள் 'ஆதன் எனும் சிறப்படைப் பெயர் உடையார் பலராவர். 'வாழி ஆதன் வாழி அவினி'[4], வாட்டாற்று ஒழினி ஆதன்[5], நெடு வேள் ஆதன்,[6] ஆதன் அழிசி[7] ஆதன் நுங்கன்[8]. ஆதன் ஓரி'[9]. இமயவரம்பன் நெடுஞ் சேரல் ஆதன்[10] 'செல்வக் கடுங்கோ வாழி ஆதன்[11] ஆடு கோட்பாட்டுச் சேரல் ஆதன்[12] 'குடக்கோ நெடுஞ்சேரல் ஆதன்[13] ஆக ஆதன் எனும் பெயரினைத் தாங்கிநிற்பார் பதின்மர் உள்ளனர்.

மேலும், 'ஆதன்' எனும் பெயர் சேரர் குலத்தவர்க்கே உரிய பெயர் என்பதும் தெளிவாக்கப்பட்ட ஒன்று. ஆகவே 'ஆதன் எழினி, ஒருவகையில் சேரர் குலத்தவரோடு தொடர்புடையவன் எனக் கொள்ளலாமே ஒழிய, அவனைக் கோசர் குலத்தவன் என்பதற்கு, அவன் பெயரில் இடம் பெற்றிருக்கும் 'ஆதன்' என்பதே பெருந்தடையாகவும் நிற்கிறது.

அதேபோல், ஆதன் எழினி என்பான் பெயரில் 'ஆதன்' என்பதை அடுத்து வரும் 'எழினி' என்ற பெயரைத்தாங்கி நிற்கும் குறுநிலத் தலைவரும் பலராவர்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தலையாலங்கானப் போரில், வெற்றி கொண்ட எழுவரில் ஒருவன் எழினி; அவன் போரில்வல்ல யானைப்படையி னையும், பொன்னால் ஆன பூண்களையும் உடையவன், என்கிறார் அப்போர்ப் பரணி பாடிய புலவர் நக்கீரர். "போர்வல் யானைப் பொலம் பூண் எழினி"[14] என்ற தொடரினைக் காண்க.

புலவர் மாங்குடி கிழாரால் பாராட்டப் பெற்றவனும்[15] வாட்டாற்றிற்கு உரியவனும் ஆகிய ஒருவள்ளல் பெயரிலும் 'எழினி' என்ற அப்பெயர் வந்துளது. "வளநீர் வாட் டாற்று 'எழினி' என்ற தொடரைக் காண்க. அவன் பெயரில், 'எழினி' என்ற பெயர் மட்டும் அல்லாமல், மேலே கூறிய ஆதன் என்ற பெயரும் தொடர்ந்து இடம் பெற்றுளது. நம்மவன் 'ஆதன் எழினி' என்றால், இவன் 'எழினி ஆதன்' மேலும், அவன் கோசர் மரபினன் அல்லன் மாறாக, வேளிர் வழி வந்தவன் என்பதற்கான அகச்சான் றும் அப்பாட்டிலேயே இடம் பெற்றுள்ளது. 'கழுமிய வென் வேல் வேளே! வளநீர் வாட்டாற்று எழினி ஆதன்[16] என்ற தொடர்களைக் காண்க. இதனைத் திருவாளர். ரா. இரா கவையங்கார் அவர்களே ஒப்புக் கொண்டுள்ளார். அவரு டைய 'கோசர்' என்ற நூலில், 'எழினி ஆதனை, வேள் என்றது போல், ஆதன் எழினியைக் கூறாமையும் காண்க[17] என்று கூறியுள்ளார்.

கடைஎழு வள்ளல்கள் எழுவர் மாய்ந்த பின்னர், பெருங் கொடைவள்ளலாக வாழ்ந்த குமணனைப் பாராட் டிய புலவர் பெருஞ்சித்திரனார் அக்கடையெழு வள்ளல்

களை நிரலே கூறும்போது,[18] 'பறம்பின் கோமான் பாரி; வல்வில் ஓரி; காரி ஊர்ந்த மலையன்; என்ற மூவரைக் கூறியதற்கும், 'பெருங்கடல் நாடன் பேகன்' 'மோசி பாடிய ஆய்; கொள்ளார் ஓட்டிய நள்ளி' என்ற மூவரைக் கூறியதற்கும் இடையில் வைத்து, அதியமானைக் கூறும் இடத்தில் 'ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல், கூவிளம் கண்ணி எழினி' என எழினி என்றே அழைத்திருப்பது காண்க.

மேலும், 'பொய்யா எழினி' என்று அரிசில் கிழாரும்[19] 'அதியர் கோமான் கொடும் பூண் எழினி' என்று ஔவை யாரும்,[20] அவனை எழினி என அழைத்திருப்பதும் காண்க

'தேமுது குன்றத்துக்கு உரியோன் ஆகிய' கண்ணன் எழினி என்பான் ஒருவனையும் சங்கப் பாடல் ஒன்று[21] அறிமுகம் செய்துள்ளது.

ஆக, 'எழினி' என்பதைத் தம் பெயரோடு இணைத் துக் கொண்டிருப்பவர், ஆதன் எழினி ஒருவன் மட்டும் அல்லன்; வாட்டாற்றானும், தலையாலங்கானப் போரில் நெடுஞ்செழியன் பால் தோற்றோனும், அதியர் கோமான் அஞ்சியும், தேமுது குன்றத்தானும், என வேறு நால் வரும் கூடஎழினி என்பதனைத் தம்பெயரோடு கொண்டுள் ளனர். அவர்களுள் எவரும் கோசர் அல்லர்.

மாறாக, தலையாலங்கானப் போர்ப் பாட்டுடைத் தலைவனின் படைமறவர் கோசர் என்பது முடிந்த முடிவு. அப் போரில் ஓர் எழினி தோன்றான் என்றால், அவன், கோசர் குலத்தவனாக இருத்தல் இயலாது.

வாட்டாற்றான் பெயரில் 'எழினி' என்பதோடு சேரர் குலத்தைக் குறிக்கும் 'ஆதன்' என்றும் இருப்பதால் அவன்

சேரர் குலத்தவனே அல்லது, கோசர் குலத்தவன் ஆகான் பெருஞ்சித்திரனாராலும் அரிசில் கிழாராலும், ஔவையாராலும் பாராட்டப் பெருவான் எழினி என அழைக்கப் பெற்றாலும், அவன் அதியர் குலத்தவன் என்பதை அவர்களே உறுதி செய்துள்ளனர்; ஆகவே அவனும் கோசர் மரபினன் அல்லன்.

கண்ணன் எழினி என்பானும், தேமுது குன்றத்தைச் சேர்ந்தவன்; ஆகவே ஆகவே அவன் ஒரு மலை நாட்டகத்தானே அல்லது, கோசர்களின் வாழிடங்களாகக் கருதப் பெறும் சோழநாட்டுக்கடற்கரையைச் சேர்ந்தவன் அல்லன் ஆகவே, அவனும் கோசர் குலத்தவன் அல்லன். ஆக, 'ஆதன் எழினி' என்ற பெயரை வைத்து, அவனைக்கோசர் மரபினன் எனத் துணிவதற்குச் சிறு ஆதாரம் தானும் இல்லை.

ஆக, திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள், ஆதன் எழினியைக் கோசர் மரபினன் எனக் கொள்வதற்கு, அகச் சான்றாக அவர் கொள்வதற்கு இருப்பன, மேலே அகம்-216, மற்றும் அகம் 90 பாடல்களே. இவ் விருபாக்களை மட்டும் அகச் சான்றுகளாகக் கொண்டு, ஆதன் எழினியை, கோசர் குலத்தவன் எனக் கொள்வது பொருந்தாது; மாறாக, அப் பாக்களால் அறியக் கூடிய செய்திகள் இன்னின்ன மட்டுமே என்பதும் ஆண்டே விளக்கப் பட்டது.

ஆதன் எழினியைக் கோசர் மரபினன் என்பதற்குத், திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்களுக்குக் கிடைத்த கடைசி ஆயுதம், அவ் வெழினி, போர்க்களத்தில் எதிரியின் களிற்றுப் படைமீது வேல் எறிந்து அவற்றை வருத்திக் கொல்வன் எனப் பொருள்படவரும்,

"எறி விடத்து உலையாச் செறிசுரை வென்வேல்
ஆதன் எழினி அருதிறத்து அழுத்திய
பெருங்களிற்று எவ்வம்'[22] என்ற வரிகளே.

"இவன், வேலை, எதிர்த்த யானையின் அரிய மார்பில் அழுந்தும்படியெறிந்தனன்' என்பதும் அறியப்படுவன இதனால் கோசர் களிறு எறிந்து வரும் பெரு வீரராக விளங்கியது தெரியலாம்'[23] என அவர் கூறுவது காண்க.

மேலும், 'இக் கோசகுலம் எதிர்த்த படையில் யானையையல்லது எறியேம் என்று திவ்ய சபதஞ் செய்து ஹஸ்தி கோசம் என்னும் ஒரு குழுவாகவும், எதிர்த்த வீரரை அல்லது எறியேம் என்று சபதஞ் செய்து வீரகோசம் என்னும் குழுவாகவும் வழங்கப்படும்'[24] என்றும் கூறியிருப்பது காண்க.

தழும்பன் கோசர் குலத்தவன் என்பதற்குக் காட்டப்பட்ட காரணங்களுள் இதுவும் ஒன்று.[25] அக்காரணம் பொருந்தாது என்பதற்கான விளக்கங்களை ஆண்டே கொடுத்துள்ளேன்;[26] மீண்டும், ஈண்டுக் கூறத் தேவை இல்லை.

ஆக ஆதன் எழினி என்ற அவன் இயற் பெயர் கொண்டோ செல்லூர் நியமம் என்ற ஊர்களைக் கொண்டோ, அவன் வேழம் எறிந்தது கொண்டோ அவனைக் கோசர் மரபினன் எனக்கொள்வது சிறிதும் பொருந்தாது என்பது உறுதி செய்யப்பட்டது. ஆதன் எழினி கோசர் குலத்தவன் அல்லன்.

சென்னை அருணா பப்ளிகேஷன்ஸ் 1960ல் வெளியிட்ட 'தமிழகத்தில் கோசர்கள்' என்ற என் நூலில் 'செல்லூர்க்

குக் கிழக்கே கடலையடுத்திருந்த நியமம் என்ற நகரை வாழிடமாகக் கொண்டிருந்தனர் கோசர் சிலர் என்ற செய்தியையும் செல்லூர்க் காவற் காட்டை அடுத்துள்ள மணல் வெளிகளில் கோசர் குல இளைஞர் மலர்க் கண்ணி கட்டி மகிழ்ந்து ஆடுவர் என்ற செய்தியையும் கொண்டு, அவ் வாதன் எழினியைக் கோசனாக்கிக் காண்பாரும் உள்ளனர்'[27] எனக் கூறியிருப்பதன் மூலம், ஆதன் எழினி கோசர் மரபினன் அல்லன் என்பதை அன்றே தெளிவாக்கி யுள்ளேன்.

# சான்றெண் விளக்கம்

1. அகம்: 220:90:216
2. மேலது
3, பக்கம்–41
4. ஐங்குறு நூறு : 1-10
5. புறம்-396
6. புறம்-338
7. புறம்-71
8. புறம்–75; 389
9. புறம்-153
10. பதிற்று–இரண்டாம் பத்து.
11. பதிற்று-ஏழாம் பத்து
12. பதிற்று–ஆறாம் பத்து
13. பதிற்று-ஒன்பதாம் பத்து

14. அகம்–26

15. புறம்-396

16. மேலது

17. பக்கம்-41

18. புறம்-158

19. புறம்-230

20. புறம்-392

21. அகம் 197

22. அகம்–216

23. இரா. இராகவையங்கார், - கோசர்-பக்-43

24. மேலது பக்கம்–49

25. மேலது பக்கம்–43

26. புலவர் கா. கோவிந்தன் எண் 10-'தழும்பன்'

27. புலவர். கா. கோவிந்தன், தமிழகத்தில் கோசர்கள், 1960; பக்கம்-103



# 12. கொங்கர் கோசரா ?

தமிழ் நாட்டில் பிறந்தும், வளர்ந்தும், பேரரசர்களாய், குறுநில மன்னர்களாய், கொடை வள்ளல்களாய், பேராண்மை மிக்க பெருவீரராய் வாழ்ந்தோர் பலர். அவர்கள் வாழ்ந்த தமிழகத்தில் கொங்கர், கோசர், தொண்டையர், பூழியர்,மழவர், வடுகர், வேளிர் போலும் மறவர் இன மக்களும் வாழ்ந்திருந்தனர், அவர்களுள் கொங்கர் பற்றி தமிழ நூல்கள் கூறுவன இவை ;

## கொங்கு நாடு :

சேரர் பேரரசு நிலவிய நாடு, பொதுவாகச் சேர நாடு என்ற பெயரால் அழைக்கப் பெற்றதாயினும் அது பிரிவில்லாப் பெரு நாடாக என்றும் விளங்கியது இல்லை. சில பல உள் நாடுகளை உள்ளடக்கிய ஒரு பெரு நாடாகவே அது இருந்து வந்துளது. அத்தகைய உள் நாடுகளுள் கொங்கு நாடும் ஒன்று. கோவை மாவட்டமும், சேலம் மாவட்டத்தின் தென் பகுதியும் கொண்ட நாடே, பண்டு கொங்கு நாடு என அழைக்கப் பெற்றது. கொங்கர் வாழ்வால் அந்நாடு அப்பெயர் பெற்றது.

## கொங்கரும் ஆனிரை ஓம்பலும் :

கொங்கர் ஆனிரை போற்றும் அருந்தொழில் மேற்கொண்டு வாழ்ந்தனர். கொங்கு நாடு நீர் வளம் அற்ற வன்னிலமே நிறைந்த மேட்டு நிலம். அதனால், தம்

ஆனிரைகட்கு நீர் அளித்து ஓம்புவான் வேண்டி கொங்கர் ஆங்காங்கே ஆழ்ந்த பல கிணறுகளைத் தோண்டி வைத்திருந்தனர். கொங்கர் சிலர் தம் ஆனிரைகளை மேய விடும் இடங்களுக்கு, அவை ஆங்குச்செல்வதன் முன்னர்ச் சென்று உடன் கொண்டு சென்ற கணிச்சி முதலாம் கருவிகளின் துணை கொண்டு தீப்பொறி பறக்குமாறு கற்களைப் பையப்பைய உடைத்தெறிந்து கிணறுகளைத் தோண்டுவர் அவ்வாறு தோண்டிய கிணறுகள் தாமும் பெருக நீர்சுரவா, நீர் சிறிதே சுரத்தலின் அந்நீரை முகக்க கொங்கர் பெரிய பெரிய முகவைகளைக் கொள்ளார்.

மிக்க ஆழத்தில் சிறிதே ஊறிக் கிடந்த அந்நீரை நீண்ட கயிறுகளில், சிறு கோவைகளைக் கட்டி முகப்பர் நீர் வேட்கை மிக்க அவர்தம் ஆனிரைகளை, உண்ணும் நீர் வேட்கை, உந்த, செந்தூள் பரக்க விரைந்தோடிச் சென்று அச்சின்னீரைப் பலவும் ஒன்று கூடி மொய்த்து நின்று பருகும் கொங்கர் தம்ஆனிரைகளை ஓம்பும் அரியசெயலை அறியத் துணைபுரிவன கீழே வரும் பாடல்கள்.

> "தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்
> கனைபொறி பிறப்ப நூறி, வினைப் படர்ந்து
> கல்லுறுத்து இயற்றிய வல்உவர்ப் படுவில்
> பாருடை மருங்கின் ஊறல் மண்டிய
> வன்புலம் துமியப் போகிக், கொங்கர்
> படுமணி ஆயம் நீர்க்கு நிமிர்ந்து செல்லும்
> சேதா எடுத்த செந்நிலக் குரூஉத் துகள்
> அகலிடு விசும்பின் ஊன்றித் தோன்றும்"[1]
>
> —குடவாயிற் கீரத்தனார்

> கேண் பரல் முரம்பின் ஈர்ம்படைச் கொங்கர்
> ஆ பரந்தன்ன செலவு"[2]
>
> —அரிசில் கீழார்

"பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறுசில ஊறிய நீர்வாய்ப் பத்தல்
கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்
ஆ கெழு கொங்கர் நாடு"[3]

—பாலைக் கௌதமனார்

## கொங்கர் தம் ஆற்றல் :

ஆனிரை ஓம்பும் அருள் உள்ளம்உடையரராய கொங்கர் தம் ஆனிரைச் செல்வத்தைக் கவர்ந்து கொள்ளவருவாரும் இருப்பர். சிலர், ஒரோ வழி கவர்ந்து சென்று அவர் தம் அரணகத்தே அடைத்து வைப்பாரும் இருப்பர், என அறிந்து, அத்தகு செயல்கள் நிகழாவண்ணம் காத்துக் கொள்ளவல்ல வெற்றி வீரராகவும், அதற்குத் துணை புரியவல்ல வாட்படை உடையராகவும், பகைவம் தம் பேரரண்களைப் பாழ் படுத்துமாறு, பெரும் பெரும் கற்களைத் தாமே எறிய வல்ல கல் கால் கவணை எனும் படைப் பொறிகளை உடையராகவும் விளங்கினர். இவற்றை அறிவிப்பன கீழ்வரும் பாடல்கள்.

"ஒளிறுவாள் கொங்கர்"[4]

— பரணர்

ஆரெயில் அலைத்த கல்கால் கவணை
நாரரி நறவின் கொங்கர்'[5]

— பெருங்குன்றூர் கிழார்

## கொங்கரின் பகைவர்கள் :

இவ்வாறு, ஆனிரைச் செல்வமும், ஆற்றல் பெருமையும் கொண்ட கொங்கர் வாழும் நாடு, சேரநாட்

ஆனிரைகட்கு நீர் அளித்து ஓம்புவான் வேண்டி கொங்கர் ஆங்காங்கே ஆழ்ந்த பல கிணறுகளைத் தோண்டி வைத்திருந்தனர். கொங்கர் சிலர் தம் ஆனிரைகளை மேய விடும் இடங்களுக்கு, அவை ஆங்குச்செல்வதன் முன்னர்ச் சென்று உடன் கொண்டு சென்ற கணிச்சி முதலாம் கருவிகளின் துணை கொண்டு தீப்பொறி பறக்குமாறு கற்களைப் பையப்பைய உடைத்தெறிந்து கிணறுகளைத் தோண்டுவர் அவ்வாறு தோண்டிய கிணறுகள் தாமும் பெருக நீர்சுரவா, நீர் சிறிதே சுரத்தலின் அந்நீரை முகக்க கொங்கர் பெரிய பெரிய முகவைகளைக் கொள்ளார்.

மிக்க ஆழத்தில் சிறிதே ஊறிக் கிடந்த அந்நீரை நீண்ட கயிறுகளில், சிறு கோவைகளைக் கட்டி முகப்பர் நீர் வேட்கை மிக்க அவர்தம் ஆனிரைகளை, உண்ணும் நீர் வேட்கை, உந்த, செந்தூள் பரக்க விரைந்தோடிச் சென்று அச்சின்னீரைப் பலவும் ஒன்று கூடி மொய்த்து நின்று பருகும் கொங்கர் தம்ஆனிரைகளை ஓம்பும் அரியசெயலை அறியத் துணைபுரிவன கீழே வரும் பாடல்கள்.

"தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்
கனைபொறி பிறப்ப நூறி, வினைப் படர்ந்து
கல்லுறுத்து இயற்றிய வல்உவர்ப் படுவில்
பாருடை மருங்கின் ஊறல் மண்டிய
வன்புலம் துமியப் போகிக், கொங்கர்
படுமணி ஆயம் நீர்க்கு நிமிர்ந்து செல்லும்
சேதா எடுத்த செந்நிலக் குரூஉத் துகள்
அகலிடு விசும்பின் ஊன்றித் தோன்றும்"[1]

—குடவாயிற் கீரத்தனார்

கேண் பரல் முரம்பின் ஈர்ம்படைச் கொங்கர்
ஆ பரந்தன்ன செலவு"[2]

—அரிசில் கீழார்

"பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறுசில ஊறிய நீர்வாய்ப் பத்தல்
கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்
ஆ கெழு கொங்கர் நாடு"[3]

—பாலைக் கௌதமனார்

## கொங்கர் தம் ஆற்றல் :

ஆனிரை ஓம்பும் அருள் உள்ளம்உடையராய கொங்கர் தம் ஆனிரைச் செல்வத்தைக் கவர்ந்து கொள்ளவருவாரும் இருப்பர். சிலர், ஒரோ வழி கவர்ந்து சென்று அவர்தம் அரணகத்தே அடைத்து வைப்பாரும் இருப்பர், என அறிந்து, அத்தகு செயல்கள் நிகழாவண்ணம் காத்துக் கொள்ளவல்ல வெற்றி வீரராகவும், அதற்குத் துணை புரியவல்ல வாட்படை உடையராகவும், பகைவம் தம் பேரரண்களைப் பாழ் படுத்துமாறு, பெரும் பெரும் கற்களைத் தாமே எறிய வல்ல கல் கால் கவணை எனும் படைப் பொறிகளை உடையராகவும் விளங்கினர். இவற்றை அறிவிப்பன கீழ்வரும் பாடல்கள்.

"ஒளிறுவாள் கொங்கர்'[4]

— பரணர்

ஆரெயில் அலைத்த கல்கால் கவணை
நாரரி நறவின் கொங்கர்'[5]

— பெருங்குன்றூர் கிழார்

## கொங்கரின் பகைவர்கள் :

இவ்வாறு, ஆனிரைச் செல்வமும், ஆற்றல் பெருமையும் கொண்ட கொங்கர் வாழும் நாடு, சேரநாட்

டின் கிழக்கு எல்லையும், சோழ நாட்டின் மேற்கெல்லையும் பாண்டிய நாட்டின் வடமேற்கு எல்லையும் கூடும் இடமாக இருந்தமையால், அந் நாடுகளை ஆண்டிருந்த மூவேந்தர்களும், அக் கொங்கரை வெற்றி கொள்வதில் ஆர்வமிக்கவராயினர்.

## கொங்கரை வெற்றி கொண்ட சேர வேந்தன் :

பெருஞ் சோற்றுதியன் சேரலாதன் மகனும், இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் உடன் பிறந்தோனுமாகிய, பல்யானைச் செல் கெழு குட்டுவன், தன் நாட்டுக்கு அணித்தாக, கொற்றம் மிக்க கொங்கரை வாழ விடல் தன் நாட்டிற்குக் கேடாம் எனும் உண்மை உணர்ந்த உரவோனாதலின், அவன் அக் கொங்கரை வென்று அவர் நாட்டைத் தன் நாட்டோடு இணைத்துக் கொண்டான். அன்று முதல் கொங்கு நாடு, சேர நாட்டின் ஒரு பகுதியாகவே ஆகி விட்டது, சேர வேந்தர்களும் கொங்கு நாட்டுக் கோவேந்தர் என்னும் பெயர் பெறலாயினர்

பல்யானைச் செல் கெழு குட்டுவனின் தம்பியாகிய இளஞ் சேரல் இரும் பொறை, 'கொங்கர் கோ' என அழைக்கப் பெற்றான். இவ்வரலாறு உணர்த்துவன பின் வரும் பதிற்றுப் பத்துப் பாடல்கள்.

> ''ஆகெழு கொங்கர் நாடு அகப்படுத்த
> வேல் கெழு தானை வெருவரு தோன்றல்'[6]
>
> — பாலைக் கௌதமனார்.

> ''நாரரி நறவின் கொங்கர் கோவே'[7]
>
> —பெருங்குன்றூர் கிழார்.

> ''கட்டிப் புழுக்கின் கொங்கர் கோவே'[8]
>
> —பெருங்குன்றூர் கிழார்.

## கொங்கரை வெற்றி கொண்ட சோழ வேந்தர் :

கொங்கரைக் கொன்று களங்கொண்ட சோழ வேந்தர் இருவராவர்; ஒருவன் கிள்ளி வளவன்; மற்றொருவன் செங்கணான், கிள்ளி வளவன், கொங்கரை வெற்றி கொண்ட வீறாண்மையைப் புலவர் கோவூர் கிழார், "கொங்கு புறம் பெற்ற கொற்ற வேந்தே'[9] எனப்பாராட்டியுள்ளார்.

சோழன் செங்கணானும், கணையன் எனவும் அழைக்கப் பெறும் சேரமான் கணைக்கால் இரும் பொறையும் பகைவர்; அக் காலை, கொங்கர் சேரரோடு சேர்ந்து வாழ்ந்து வந்தனர். மேலும் கொங்கர் படையொன்றும் கணையனுக்குத் துணை நின்றது. அதனால் செருக்குற்ற அவன், சோணாட்டின் மீது போர் தொடுக்கத் திட்டமிட்டான்; அதை அறிந்தான், அக் காலை சோழர் அரியணையில் வீற்றிருந்த செங்கணான்; உடனே, தன் படைத் தலைவர்களுள் சிறந்தோனும், போஓர் எனும் ஊருக்கு உரியோனும் ஆகிய பழையன் என்பானை, சேரர் அணியைச் சிதறடித்து வருமாறு போக்கினான்.

சேர நாட்டைச் சேர்ந்த கழுமலம் எனும் இடத்தே போர் நடந்தது; பழையன், ஒரே பகலில், கணையன் படைத் தலைவர்களாய்க் கூடியிருந்த நன்னன், ஏற்றை, அத்தி கங்கன், கட்டி, புன்றுறை முதலாய அறுவரையும் அழித்தான். ஆயினும் ஏன்? இறுதியில் கொங்கர் படையால் களத்தில் மாண்டான். தன் படைத்தலைவன் பழையன் மாண்டான் என்பதறிந்த செங்கணான், தானே களம் புகுந்து, கொங்குப் படையையும் அழித்து, கணையனையும் சிறை செய்து கொண்டு சென்றான்.

கழுமலம் போர்க் காட்சிகளைக் காட்டுவன கீழ்வரும் பாடல்கள்:

"கொற்றச் சோழர், கொங்கர் பணீ இயர்,
வெண் கோட்டு யானைப் போஒர் கிழவோன்
பழையன் வேல் வாய்ந்தன்ன"[10]

— பெயர் அறியாப் புலவர்

"நன்னன், ஏற்றை நறும் பூண் அத்தி
துன்னரும் கடுந்திறல் கங்கன், கட்டி,
பொன்னணி வல்வில் புன்றுறை என்றாங்கு
அன்றவர் குழீஇய அளப்பருங் கட்டூர்ப்
பருந்து படப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டது நோனான் ஆகித், திண் தேர்க்
கணையன் அகப்படக் கழுமலம் தந்த
பிணையல் அம் கண்ணிப் பெரும்பூட் சென்னி"[11]

— குடவாயில் கீரத்தனார்

"கவளம் கொள் யானையின் கைதுணிக்கப்பட்டுப்
பவளம் சொரிதரு பைபோல்-திவள் ஒளிய
ஒண்செங் குருதி உமிழும் புனல் நாடன்
கொங்கரை அட்டகளத்து"[12]

— பொய்கையார்

## கொங்கரை வெற்றி கொண்ட பாண்டியன் :

கொங்கரால், தன் அரச வாழ்விற்கே அழிவுண்டாகி விடுமோ எனஅஞ்சினான் பசும்பூண் பாண்டியன் அதனால் அவர்களை, அவர்களின் கொங்கு நாட்டிலிருந்தே துரத்தத் துணிந்தான். உடனே, தன் படைத் தலைவர்களுள் ஒருவனாகிய அதியன் என்பான்பால் அப்பொறுப்பினை ஒப்படைத்தான். அதியனும், கொங்கு நாடு புகுந்து, கொங்கரை வென்று, அவர் நாட்டையும் கைப்பற்றி மீண்டான். இவ்வகையால் கொங்கரை வெற்றி கொண்ட

அதியன், பிற்காலத்தே, வாகை எனும் இடத்தில் நடந்த போர் ஒன்றில் உயிர் துறந்தான். தம்மை வென்று விரட்டிய அதியனின் அழிவு கேட்ட கொங்கர் களி பேருவகை பூத்தனர் இவ் வரலாறு உணர்த்துவன வரும் பாக்கள் ;

"கொங்கர் ஓட்டி
நாடு பல தந்த பசும்பூட் பாண்டியன்"[13]

— நக்கீரர்

"கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும் பூட்பாண்டியன் வினைவல் அதியன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே"[14]

— பரணர்

## கொங்கரைக் குடகடல் ஓட்டிய ஆய் அண்டிரன் :

கொங்கரின் படைவன்மை கண்டு அஞ்சினார், மூவேந்தர் மட்டும் அன்று; குறுநில மன்னர் சிலரும் அஞ்சினர்; அவர்களுள் ஒருவனாகிய ஆய் அண்டிரன், அக்கொங்கரை வெற்றி கொண்டதோடு அமையாது, அவர்களை மேலைக் கடற்கரை நோக்கி ஓடுமாறு வெற்றி கொண்டு, அவ்வாறு ஓடுங்கால், அவர்கள் களத்தே போட்டு விட்டுச் சென்ற வேற்படை முதலாம் படைக் கலங்களையும் கைப்பற்றிக் கொண்டான் இச் செய்திக்குச் சான்று பகர்வது :

"கொங்கர்க் குடகடல் ஓட்டிய ஞான்றைத்
தலைப் பெயர்த்திட்ட வேலினும் பலவே"[15]

என்ற உறையூர் ஏணிச் சேரிமுட மோசியார் பாடலாகும்.

## கொங்கர் கோசரா?

மேலே எடுத்து வைத்த பதினொரு பாடல்களும், அப்பாடல்களைப் பாடிய, குடவாயில் கீரத்தனார், அரிசில்

கிழார், பாலைக் கௌதமனார், பரணர், பெருங்குன்றூர் கிழார், பொய்கையார், நக்கீரர், உறையூர், ஏணிச்சேரி முட மோசியார், ஆகிய புலவர் எண்மர், பெயர் அறியாப் புலவர் ஒருவர் ஆகிய ஒன்பது புலவர்களும், அளிக்கும் கொங்கர் வரலாறு இத்துணையவே.

மேலே எடுத்து வைத்த அகச் சான்றுகள் அனைத்தும், கொங்கர் என்ற இனத்தவர், கோசர், தொண்டையர், பூழியர், மழவர், வடுகர், வேளிர், என்ற வேறு இனத்தவர்கள், போலவே, அவர்களின் வேறுபட்ட தனிஇனத்தவர் என்பதையே வலியுறுத்துவனவாகவும், திருவாளர். இரா இராகவையங்கார் அவர்கள் மட்டும், இவர்கள் கோசரின் வேறுபட்டவர் அல்லர்; கொங்கர் எனப் பிரித்துக் கூறப்பட்டாலும், கோசர் இனத்தவரே; கொங்கர், கோசர் என்பன இரண்டும், கோசர் என்ற ஓர் இனத்தவரையே குறிக்கும் என்கிறார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951ல் வெளியிட்ட, கோசர் என்ற தம் சிற்றாராய்ச்சி நூலின் முதல் பக்கத்திலேயே திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள்,

> "கொங்கிளங் கோசர் தங்கள் நாட்டகத்து
> நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய
> மழை தொழில் என்றும் மாறாதாயிற்று'[16]

என்ற சிலப்பதிகார வரிகளை எடுத்தாண்டு விட்டு

'என்புழி, அரும்பதவுரைகாரர், கோசரைக் 'குறும்பு செலுத்துவார் சில வீரர்' எனவுரைத்தார். அடியார்க்கு நல்லார் ஈண்டுக்' கொங்கு மண்டலத்து இளங்கோவாகிய கோசர் என்று கருதி மொழிந்தனர். அரும்பதவுரைகாரர் குறும்பு செலுத்துவார் என்றது' சிறிய அரண்களில் ஆட்சி

செலுத்துவார் என்றவாறாம். அடியார்க்கு நல்லார் கொங்கு மண்டலத்து இளங்கோவாகிய கோசர் என்றது வேந்தர் வழியினராய்க் கொங்கில் வதிகின்ற கோசரைக் குறித்ததாகும். இவர், இங்ஙனங் கருதியது மேல்வரந்தரு காதையில் இவரைக் 'குடகக் கொங்கர்' எனக் கூறியது பற்றி என்று துணியலாம். குடகக் கொங்கர் என்றவரைக் குடமலை நாட்டாராயிருந்து கொங்கிற் குடியேறி வதிகின்ற இளங்கோ வழியினராகிய கோசர் என இவர் கருதினராவர்,'[17] என்று கூறுவது காண்க,

மேலும் அதே நூலில், 'வரந்தருகாதையுள்; ஆரிய மன்னர் முதலாகக் கயவாகு வேந்தனிறுதியாகக் கூறிய அரசர்களுக்கிடையே, 'குடகக் கொங்கர்' என இவரைக் (கோசரை) கூறுதலான், இவரையும் (கோசர்) அவர் அரசராகக் கருதியே இளங்கோவாகிய கோசராக வுரைத்தனரெனத் தெளியலாம்'[18] என்றும் பிறிதோரிடத்தில் 'செங்குட்டுவன் கொங்கிற் கோயில் எடுத்தது கண்டு கொங்கராய்க் குடகிலுள்ளாராகிய கோசரும் தாங்கள் தங்கியுள்ள குடமலை நாடுகளிலே கண்ணகிக்கு விழவும் சாந்தியும் செய்ய விழைந்தனர் என்பதே இயைபுடைத்தா மென்க'[19] என்றும், அடுத்து,' இவர் (அரும்பத வுரைகாரர்) கருத்துப்படி நோக்கிற் கொங்கிளங் கோசர் என்பாரைக் குடகக் கொங்கர் என வரந்தரு காதையில் விளக்கியதனால், கொங்கினின்று குடகப் புறத்துக் குடியேறிய இளங்கோசர் என்பதே திரண்ட பொருளாகும் என்ப'[20] எனவும், அவர் கூறுவது காண்க. இதனால் கொங்கர் வேறு, கோசர் வேறு அல்லர் ; கொங்கரும் கோசரும் ஒருவரே என்று திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் முடிவாதல் தெரிகிறது.

இனி திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்களின் கூற்றினை ஆராய்வோம். திரு. அய்யங்கார் அவர்கள், தம்

முடிவிற்குத் துணையாக நாடுவன, சிலப்பதிகாரத்தில் வரும் இரு சிறுவரிகளும் அவற்றிற்கு அரும்பதவுரையாசிரியரும், அடியார்க்கு நல்லார் அவர்களும் கூறும் உரைகளுமே ஆம் ஒன்று, உரை பெறு கட்டுரையில்,

> ''கொங்கிளங் கோசர் தங்கள் நாட்டகத்து
> நங்கைக்கு விழாவொடு சாந்தி செய்ய
> மழை தொழில் என்றும் மாறாதாயிற்று'

என்ற தொடரும் அத்தொடரில்வரும் 'கொங்கிளம் கோசர்' என்ற தொடருக்கு, அரும்பதவுரைகாரர் 'குறும்பு செலுத்துவார் சில வீரர்' என்றும், அடியார்க்கு நல்லார் 'கொங்கு மண்டலத்து இளங்கோவாகிய கோசர்' என்றும் விளக்கம் அளித்தது.

இரண்டாவது; வரந்தரு காதையில், கண்ணகிக்கு சிலையெடுத்த விழாக்காண வந்தோர் பட்டியலில், 'குடகங் கொங்கரும்'[21] இடம் பெற்றிருப்பது.

கொங்கிளங் கோசர் தங்கள் நாட்டகத்து விழாவொடு சாந்தி செய்தனர் எனக் கூறும் உரைபெறு கட்டுரை, அவ்வாறு விழா செய்தவராகக் கொங்கிளங் கோசரை மட்டும் குறிப்பிடவில்லை. அவர்கள் அது செய்வதன் முன்னர்க் கொற்கையில் இருந்தவெற்றி வேற்செழியன் விழாவொடு சாந்தி செய்தான். அவன் சாந்தி செய்ய, அவனைத் தொடர்ந்து கோசர் செய்ய, அவர் செயல் கேட்டு கயவாகு பாடி விழாக் கோள் பன்முறை எடுத்தான் அவனைத்தொடர்ந்து, சோழன் பெருங்கிள்ளி, கோழி அகத்துப் பத்தினிக் கோட்டம் சமைத்து நித்தம் விழாவுக்கு வகை செய்தான்.

இவ்வாறு விழா எடுத்த இந்நால்வருமே வஞ்சிக்கண் செங்குட்டிவன் கண்ணகிக்குக் கோயில் அமைத்துப் படிமம்

நிறுவி எடுத்த விழாவுக்குச் சென்றார்களா, என்றால் இல்லை, விழா எடுத்தவர்களுள் கயவாகு ஒருவன் மட்டுமே வஞ்சிக்குச் சென்றிருந்தான்.

அதே போல், செங்குட்டுவன் எடுத்த விழாவிற்கு வந்திருந்தோர் அனைவரும் தங்கள், தங்கள் நாட்டகத்தே விழா எடுத்தார்களா என்றால் அதுவும் இல்லை. விழாவிற்கு வந்திருந்தவர்கள் சிறை வீடு பெற்ற ஆரிய மன்னர், சிறை வீடு பெற்ற தமிழக மன்னர் குடகக் கொங்கர் மாளுவ வேந்தர் கயவாகு[22] ஆகியோர்தான் அவர்களுள் கயவாகு மட்டுமே தன் நாட்டகத்தே விழா எடுத்தான்,

ஆக உரைபெறு கட்டுரையில் வரும், 'கொங்கு இளங்கோசர் 'என்ற தொடரிலும், வரந்தரு காதையில் வரும், 'குடகக் கொங்கர்' என்ற தொடரிலும் முறையே 'கொங்கு' 'கொங்கர் என்ற பெயர்கள் இடம் பெற்றிருப்பது ஒன்றையே கொண்டு கொங்கரைப் போலவே கோசரும், குடகு நாட்டில் வாழ்ந்தவர் அதுமட்டும் அன்று கொங்கரும், கோசரும் ஒருவரே எனக் கோடல் பொருந்தாது.

மேலும், 'குடகக் கொங்கர்'[23] என்ற சிலப்பதிகாரத் தொடரும், கிணறுகள் தோண்டி, ஆனிரை ஓம்பும் கொங்கரின் தொழில்களை விளங்கக் கூறும், அகநானூறு[24] பதிற்றுப் பத்து[25] பாடல்களும், கொங்கர் வாழிடம் கடற்கரையைச் சார்ந்தது அன்று; செந்தூள் பறக்கும் மேட்டு வன்புலம் என்பதையே உணர்த்தும். ஆய் அண்டிரன் அவர்களைக் குடகடல் ஓட்டினான்[26] என்றால் கொங்கர் வாழிடம் கீழ்க் கடற் கரையைச் சார்ந்திருந்தால், அச் செயல் அவனால் எளிதில் முடிந்திருக்காது. கொங்கர் மேலைக் கடலைச் சார்ந்து இருந்தமையினாலேயே அது அவனால் எளிதில் முடிக்கப்பட்டது.

ஆகவே, கொங்கர் வாழிடம், திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்களே ஒப்புக் கொண்டுள்ள[27], கோசர்

வாழ்விடமா கியகீழ்க்கடலைச் சார்ந்தது அன்று. இவ்வகை யில் நோக்கினும், அதாவது குட நாட்டில் வாழ்பவர் கொங்கர் குண நாட்டில் வாழ்பவர் கோசர் என்ற வகை யில் நோக்கினும் கொங்கரும் கோசரும் ஒருவராதல் எனப் பொருந்தாது என்பது உறுதியாம்.

சென்னை அருணா பப்ளிகேஷன்ஸ். 1960ல் வெளி யிட்ட 'தமிழகத்தில் கோசர்கள்' என்ற என் நூலில், திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் கூறியிருக்கும் கருத்தைப் பின் வருமாறு கூறி மறுத்துள்ளேன்.

"கொங்கு நாட்டிற்கு உரியவர் கொங்கரே என்பதிலும் கொங்கு நாட்டில் வாழ்பவர் கொங்கரே ஆதல் வேண்டும் என்பதிலும் சிறிதும் ஐயம் இல்லை, என்றாலும், கொங் கிற்கு உரியவராகிய கொங்கர், குடகடற்கரை நாட்டிற்குத் துரத்தப்பட்டனர் என்பதற்கு இறவா இலக்கியச் சான்று ஒன்றும் இருக்கிறது. வேளிர் தலைவனும், வள்ளலுமா கிய ஆய் அண்டிரனைப் பாடிய உறையூர் ஏணிச்சேரி முட மோசியார் என்ற புலவர், பாடிய பாட்டு ஒன்றில்[28] அவன் கொங்கரைக் குடகடற் பகுதிக்கு ஓட்டிய செய்தி உரைக் கப்பட்டுள்ளது. ஆக, தங்கள் வாழிடமாம் கொங்கு நாட் டை விட்டுக் கொங்கர், குடமலை நாட்டிற்குச் சென்றுவிட அவர் விட்டுச்சென்ற கொங்கு நாட்டில், அதன் அண்டை நாடாம் துளு நாட்டில் வாழ்ந்திருந்த கோசர் குடியேறினர் எனக் கொள்வதால், எத்தகைய வரலாற்று இடுக்கணும் இடம் பெறாமை உணர்க.

மேலும், செங்குட்டுவன், வஞ்சி மாநகரில் எடுத்த விழா விற்கு வந்திருந்தவர், ஆரிய மன்னர் சினறவீடு பெற்ற மன்னர், குடகக் கொங்கர், மாளுவ வேந்தன், கயவாகு முதலியோராகும். கண்ணகிக்குத் தங்கள் நாட்டகத்தே விழா எடுத்தோர், கொற்கை ஆண்ட வெற்றி வேற் செழி யன், கொங்கிளங் கோசர், கயவாகு சோழன் பெருங்

கிள்ளி என்றே உரைபெறு கட்டுரை கூறுகிறது. ஆகவே விழாவிற்கு வந்திருந்தோர் அனைவரும், தம் நாட்டகத்தே விழா எடுத்திலர் தம் நாட்டகத்தே விழா எடுத்தோர் அனைவரும் விழாக் காண வஞ்சிக்கு வந்தாரல்லர் எனத் தெரிகிறது.

ஆகவே, "விழாவிற்கு வந்திருந்தார்கள் கொங்கர்; அக் கொங்கு நாட்டில் விழாக் கொண்டாடினார்கள் கோசர் ஆகவே, கொங்கரும் கோசரும் ஒருவரே எனக்கொள்வது பொருந்தாது. கொங்கர் வேறு; கோசர் வேறு என்பதை உணர்த்தவே, கொங்கரைக் குடகடலோடும், கோசரைக் கொங்கோடும் தொடர்பு படுத்தியுள்ளார். ஆசிரியர் இளங்கோவடிகள் அவளை, அவ் விருவருமே கடவுளாக ஏற்றுப் போற்றினார்கள் என்ற அவ்வேறுபாட்டை உணர்த்தவே, வேட்டுவ வரியில், "இவளோ கொங்கச் செல்வி, குடமலையாட்டி" என அவர்தம் வாழிடங்களை வேறு வேறாக எடுத்து ஓதினார்...ஆக எவ்வகையான் நோக்கினும், குடகக் கொங்கன் வேறு; கொங்கு நாட்டுக் கோசர் வேறு என்பது தான் நிலைநாட்டப் பெறுகிறதே அல்லாமல், கொங்கரும், கோசரும், ஒருவராவர் எனக் கொள்வது சிறிதும் ஏற்புடைத்தாகாது என அறிக'[29]

### கோசர் வாழிடம் கீழ் கடலைச் சார்ந்தது :

'கோசர்' என்ற தலைப்பிட்ட தம் சிற்றாராய்ச்சி நூலில்[30], திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள்,

> 'கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
> கழனி யுழவர் குற்ற குவளையும்
> கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
> பல்லிளங் கோசர் கண்ணியயரும்
> மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்
> .................................................'

என்ற பாடலை[33] எடுத்தாண்டு விட்டு, ஈண்டுச் செல்லி என்பது செல்லூர்க்கு ஒரு பெயர் எனல் கொள்ளத் தகும்' என்று கூறுகிறார்[32]

அதையடுத்து,

"அருந்திறற் கடவுட் செல்லூர்க் குணா அது
பெருங்கடல் முழக்கிற்று ஆகி, யாணர்,
இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கருங்கண் கோசர் நியமம்'

என்ற பாடலைக்[33] காட்டி விட்டு, 'என்றதனால், செல்லூர்க்குக் கிழக்கே கடலோரத்துக் கோசர் வாழும் நியமம் என்ற ஊர் இருப்பது அறியப்பட்டது; அதனால் அதற்கேற்ப ஈண்டுச் செல்லி' செல்லூர் எனக் கொள்ளப் பட்டது. மேலே காட்டிய அகப் பாட்டில்[34] மலைப்புறமே கூறாது, கடலும் கழியும், கடிமிளைப் புறவுமே கூறுத லான், இது சோணாட்டதாதல் தெள்ளிது'[34] என்று கூறும் திருவாளர், அய்யங்கார் அவர்கள்,

'செடா அத் தீயி னுருகெழு செல்லூர்...
கடா அயானைக் குழூஉச்சமந்ததைய
மன் மருங்கறுத்த மழுவா ணெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பி னெடுந்தூண்'

என்ற பாடலை[35] எடுத்தாண்டு விட்டு, பரசுராமன் காசி பனைக் கொண்டு வேட்பித்த இடம், செல்லூர் என்பது. 220-ஆம் அகப் பாட்டால் அறியப்படுதலான், பரசுராமன் பின்னே வருணனை வேண்டிப் புதிதாக உண்டாக்கிய கடன் மலை நாட்டில் இச் செல்லூர் இருத்தல் பொருந் தாது என்பது தெரியலாம்'[36] என்று கூறுகிறார்.

அதையடுத்து, 'வாட்டாற்றுக்கும்,செல்லிக்கும் மலைப் புறமே கூறாமையால், இது கடன் மலைநாட்டுத் திருமால் திருப்பதி யாகாமை நன்குணரலாம்'[37] என்று முடிவு கூறுகிறார்.

ஆக, கோசர் வாழிடம், சோணாட்டுக் கடற்கரை நகரங்களே அல்லது, குடக நாடு அன்று என்பதை திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்களே உறுதிசெய்துள்ளார்

கோசர் வாழிடம், கீழ்க் கடற்கரையைச் சேர்ந்த செல்லூர்க்கு அணித்தான நியமம் எனக் கூறும் அதே சங்க இலக்கியங்கள், கோசரைக் கொங்கு நாட்டைச் சேர்ந்தவர்[38] என்றும், மேலைக் கடற்கரையைச் சேர்ந்த மங்களூரை நடுவிடமாகக் கொண்ட துளுமொழி வழங்கும் நாட்டைச் சேர்ந்தவர்[39] என்றும், குமணனுக்கு உரியதாக அகத்திலும்,[40] புறத்திலும்,[41] கூறப்பட்டதும் அவனுக்கு முன்னமோ அல்லது பின்னரோ, பிட்டங் கொற்றன் என்பவனுக்கு உரியதாகக் கூறப்பட்டதும்,[42] ஆகிய மேலை நாட்டின் கண்ணதான குதிரை மலைக்கு அணித்தாக வாழ்ந்திருந்து, கோசர் படைக்கலப் பயிற்சி பெற்றனர்[43] என்றும் கூறுவதால், கோசர் மேலைக் கடலைச் சார்ந்த இடத்தில்தான் வாழ்ந்தனர் எனக் கோடல் வேண்டி நேராதோ, நேராது; நிச்சயமாக; அதற்கான காரணமும் விளக்கமும் இதோ :

கோசர், முதுகோசர் என்றும்[44] இளங்கோசர் என்றும்[45] இருவகைப் பட்டே வாழ்ந்து வந்தனர், அன்னி மிஞிலி என்பாளின் தந்தை மேய்த்து வந்த ஆனிரை, முதுகோசர் விளைத்திருந்த பயற்றங்கொல்லையுள் புகுந்து மேய்ந்து விடவே, அம் முதுகோசர், அச்சிறு பிழைக்கு, அன்னி மிஞிலியின் தந்தை கண்களையே போக்கி விட்டனர் அக் கொடுஞ் செயல் புரிந்தாரைப் பழிக்குப் பழி வாங்காது விடேன் என வஞ்சினம் கூறிஅது செய்து முடிக்க வல்லான் அழுந்தூர்த் திதியனே என்பது அறிந்து, அவன் பால்

சென்று முறையிட, அவன், அம்முதுகோசர் குலத்தையே அழித்துவிட்டான்[46] முதுகோசர் வாழ்வும் முடிந்து விட்டது அந் நிகழ்ச்சிக்குப் பின்னர், அம் முதுகோசர் வாழ்க்கை பற்றி மௌனமாகி விட்டன சங்க இலக்கியங்களும்.

முது கோசர்களுக்கு நேர்ந்து விட்ட கதியினைக் கண்ணெதிரில் கண்ணுற்றனர், அம்முதுகோசர்போலவே கீழ்க் கடற்கரை நகரங்களாம் செல்லூர் நியமம் போன்றவற்றில் வாழ்ந்திருந்த இளங்கோசர், இளங்கோசர் தமிழகத்துக் கிழக்குக் கடற்கண் வாழ்ந்திருந்தனர் என்பதை அவர்கள் பாண்டியர் படையில் பணியாற்றியதை உறுதி செய்யும் மதுரைக் காஞ்சி அவர்களை, 'இளம்பல் கோசர்' எனக் கூறுவதே உறுதி செய்யும்.[47]

முது கோசர் கதியினைக் கண்டு அவர்கள் கலங்கி விட்டனர். ஈண்டே இருந்தால் தமக்கும் அதே கதிதான் நேரும் என அஞ்சினர் போலும், அதனால் கீழ்க் கடற்குச் சேய்மைக் கண்ணதான மேலைக் கடற்கரையைச் சேர்ந்த துளுநாடு சென்று வாழ்ந்தனர், குதிரை மலைச்சாரலில் படைப் பயிற்சி பெற்றனர்.

கொங்கில் கண்ணகிக்கு விழா எடுத்த கோசரும், பிட்டங் கொற்றனுக்கு உரிய குதிரைமலைக்கு அணித்தாகப் போர் பயிற்சி பெற்ற கோசரும் முறையே 'கொங் கிளங் கோசர்,[48] இளம்பல் கோசர்'[49] என்றே அழைக்கப் பட்டிருப்பதும் காண்க.

சங்க இலக்கியங்கள் தரும் வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டு நோக்கிய வழி கோசர் வரலாறாகத் தெரிவது இவ்வளவே: ஆகவே கொங்குநாட்டைத் தங்கள் நிலைத்த வாழிடமாகக் கொண்டு வாழ்ந்திருந்த கொங்கர் வேறு; கீழ்க் கடற் கரைக்கண் வாழ அஞ்சிப் புகலிடம் தேடி கொங்கு நாடு சென்று வாழ்ந்த இளங் கோசர் வேறு: கொங்கரும் கோசரும் ஓரினத்தவர் அல்லர்; கொங்கர் வேறு, கோசர் வேறு.

# சான்றெண் விளக்கம்


1. அகம்;79
2. பதிற்று-77
3. பதிற்று-22
4. குறுந்-393
5. பதிற்று-88
6. பதிற்று-22
7. பதிற்று-88
8. பதிற்று-90
9. புறம்-373
10. நற்றிணை-10
11. அகம்-44
12. களவழி நாற்பது-14
13. அகம்-253
14. குறுந்தொகை-393
15. புறம்-130
16. சிலம்பு உரைபெறு கட்டுரை,
17. இரா. இராகவையங்கார், கோசர், 1950, பக்கம்-1
18. மேலது பக்கம்-1
19. மேலது பக்கம்-2
20. மேலது பக்கம்-2
21. சிலம்பு வரந்தரு காதை-159
22. மேலது வரந்தரு காதை:57-60
23. சிலம்பு வரந்தரு காதை-159

24. அகம்-79

"தோட் பதன் அமைத்த கருங்கை ஆடவர்
கனை பொறி பிறப்ப நூறி, வினைப் படர்ந்து
கல்லுறுத்து இயற்றிய வல் உவர்ப் படுவில்
பாருடை மருங்கின் ஊறல் மண்டிய
வன்புலம் துமியப் போகிக், கொங்கர்
படுமணி ஆயம் நீர்க்கு நிமிர்ந்து செல்லும்
சேதா எடுத்த செந்நிலக்குரூ உத் துகள்
அகலிடு விசும்பின் ஊன்றித் தோன்றும்

25. பதிற்று-22

"பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறுசில ஊறிய நீர் வாய்ப் பத்தல்
கயிறு குறு முகவை மூயின மொய்க்கும்
ஆ கெழு கொங்கர் நாடு"

பதிற்று-77

"சேண் பரல் முரம்பின் ஈர்ம்படைக் கொங்கர்
ஆ பரந்தன்ன செலவு"

26. புறம்-130

'கொங்கர்க் குடகடல் ஓட்டிய ஞான்றை'

27. கோசர்-பக்கம். 40, 41, 42 ஆகியவற்றைக் காண்க, அவர் ஒப்புதல் தொடர்ந்து அளிக்கப்பட்டுள்ளது.

28. புறம்-130.

29. புலவர் கா. கோவிந்தன், தமிழகத்தில் கோசர்கள், 1960, பக் 45, 46, 47.

30. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பக். 40.

31. அகம்-216

32. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பச்–41

33. அகம்-90

34. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பக்கம்-41

36. ரா, இராகவையங்கார், கோசர், 1951, பக்-42.

37. மேலது பக்-42

38. சிலம்பு – உரைபெறு கட்டுரை. 'கொங்கு இளங் கோசர்'.

39. அகம்: 15 'மெய்ம்மலி பெரும்பூண் செம்மல் கோசர்... தோகைக் காவின் துளு நாடு'.

40. அகம்:379. 'நெடு நெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி'

41. புறம்;158 : ஊராது ஏந்திய குதிரைக் கூர் வேல் கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினி'

42. புறம் ; 168, 'ஊராக் குதிரைக் கிழவ'

43. புறம் ; 169. 'இளம்பல் கோசர், விளங்கு படை கன் மார் இகலினர் எறிந்த அகல் இலை முருக்கின் பெரு மரக் கம்பம்'.

44. அகம். 262.

45. சிலம்பு ; உரை பெறு கட்டுரை;புறம்–169.

46. அகம் 262, 196.

47. வரிகள் ; 773–774
'இளம்பல் கோசர், இயல் நெறிமரபின்
நின் வாழ் மொழி கேட்ப'.

48. சிலம்பு : உரை பெறு கட்டுரை

49. புறம் ; 169.



# 13. வாட்டாற்று எழினி ஆதன், கோசர் எறிந்த வேல் பாயப்பெற்று இறந்தனனா?

வாட்டாற்று எழினி ஆதன், கோசர் எறிந்த வேல் பாயப் பெற்று இறந்தனனா? ஆம், என்கிறார், திருவாளர். மா. இராசமாணிக்கம் பிள்ளையவர்கள். தாம் எழுதிய 'சோழர் வரலாறு' எனும் நூலில், 'வாட்டாறு என்ற ஊரையும், செல்லூர் என்பதனையும் ஆண்ட எழினிஆதன் என்பவனைக் கோசர் எதிர்த்தனர். அவன் செல்லூர்க்குக் கிழக்கே, கோசரோடு போரிட்டு, வேல் மார்பில் தைக்கப் பெற்று இறந்தான்''[1]எனக் கூறியிருப்பது காண்க. அவ்வாறு கூறிய திருவாளர் பிள்ளை அவர்கள்,

"அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது
பெருங்கடல் முழக்கிற்றாகி, யாணர்
இரும்மிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கடுங்கண் கோசர் நியமம்''

என்ற மதுரை மருதன் இளநாகனார் பாடலையும்,[2]

"கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி உழவர் குற்ற குவளையும்
கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
ல் இளங்கோசர் கண்ணி அயரும்
ல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்
றிவிடத்து உலையாச் செறி அரை வெள்வேல்

ஆதன் எழினி அருநிறத்து அழுத்திய
பெருங்களிற்று எவ்வம் போல''

என்ற ஐயூர் முடவனார் பாட்டையும்,[3] சான்றுகளாகக் காட்டியுள்ளார்.

கோசர் வாழும் நியமம் என்ற ஊர், செல்லூர்க்குக் கிழக்கே உளது. அக் கோசர் போரில் பட்ட வீரப்புண் களால் ஆன வடுக்கள் நிறை முகத்தினர். அச்செல்லூர்க்கு அருகே, இளங்கோசர் பலர் ஒன்று கூடி இருந்து, கட லாடு மகளிர் கொய்து தந்த புலிநகக் கொன்றை மலரை யும், கழனி உழவர் பறித்துப் போட்ட குவளை மலரையும் காவற்காட்டில்மலர்ந்த முல்லை மலரோடு கலந்து கட்டிய கண்ணி அணிந்து விளையாடுவர் அச் செல்லூர், ஆதன் எழினி என்பானுக்கு உரியது. அவன் களிற்றின் மீது வேல் எறியும் வீரம் மிக்கோன் அவன் எறியும் வேல் ஏற்ற களிறு கள், கடுந்துயர் உறும். என்ற இவையே, இவ்விரு பாடல் களும் அறிவிக்கும் செய்திகளாம்

இப் பாக்களில் இடம்பெற்றிருக்கும் ஊர்கள், நியமமும் செல்லூருமே அல்லது, வாட்டாறு அன்று; இப்பாக்களின் பாட்டுடைத் தலைவன், ஆதன் எழினியே அல்லது, எழினி ஆதன் அல்லன். இந்த வேறுபாடுகளையும், திருவாளர். பிள்ளை அவர்கள் உணரவில்லை போலும்.

அங்ஙனமாயின், வாட்டாற்று எழினி ஆதன் என்பான் ஒருவன் இல்லவே இல்லையா? கோசர்க்கும், அவனுக்கும் தொடர்பு இல்லவே இல்லையா? என்றால் இரு கேள்வி களுக்கும் ஒருசேர இருந்தனன்; இருந்தது, என்ற விடை யளிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

மாங்குடி கிழார் என்ற புலவர், வாட்டாற்று எழினி ஆதனைப் புறநானூற்றுப் பாடல் ஒன்றில்[4] பாராட்டியுள் ளார். அப்பாடல் இதோ :

"கீழ்நீரான் மீன் வழங்குந்து;
மீநீரால் கண்ணன்ன மலா பூக்குந்து
கழிசுற்றிய விளை கழனி,
அரிப்பறையால் புள்ளோப்புந்து
நெடுநீர் தொகூஉ மணல் தண்கால்
மென்பறையால் புள் இரியுந்து
நனைக் கள்ளின் மனைக் கோசர்
தீந் தேறல் நறவு மகிழ்ந்து
தீங்குரவைக் கொளைத் தாங்குந்து;
உள்ளிலோர்க்கு வலியாகுவன்;
கேள் இலோர்க்குக் கேள் ஆகுவன்;
கழுமிய வென்வேல் வேளே;
வளநீர் வாட்டாற்று எழினி ஆதன்;
கிணையேம் பெரும!
கொழுந்தடிய சூடென்கோ!
வளநனையின் மட்டு என்கோ!
குறுமுயலின் நிணம் பெய்தந்த
றுறு நெய்ய சோறு என்கோ!
திறந்து மறந்த கூட்டு முதல்
முகந்து கொள்ளும் உணவு என்கோ!
அன்னவை பல பல......வருந்திய
இரும் பேரொக்கல் அருந்து எஞ்சிய
அளித்து உவப்ப ஈந்தோன்"

இப்பாட்டால் நாம் அறியக் கூடியன இதோ ;

"வளம் நிறைந்த பேரூர் வாட்டாறு : அந்நாட்டு நீர்நிலைகளின் கீழிடமெல்லாம் மீன்களாலும், மேலிட மெல்லாம் மலர்களாலும் நிறைந்து கிடக்கும். வடிகால்களால் சூழப் பெற்ற அந்நாட்டு நெல்விளை நன்செய்கள், பறையறைந்து ஓட்டுமளவு, பறவைகள் கூட்டமாகக் கூடு கட்டி வாழும் வளம் உடையன;

கடற்கரைக்கண், இரைதேர்ந்துண்ணும் இனப்பறவைகள் எழுந்து ஓடுமாறு, சிறு நொய் மணல்களை அள்ளித் தூவும் ஆங்கு வீசும் கடற்காற்று ; அவ்வூர் வாழ் கோசர் முதலாம் மக்கள் மட்டுண்டு மகிழ்ந்து குரவை முதலாம் கூத்தாடி இன்புறுவர்.

இத்தகு வளஞ்சால் பெருநகரைப் பெற்று ஆளும் எழினிஆதன், ஊக்கம் அற்றார்க்கு உறுதுணையாய் நின்று காக்கும் உரனும், அறிவுரை அளித்து ஆகும் வழி காட்டும் ஆருயிர் நண்பர் இல்லார்க்கு ஆருயிர் நண்பனாய் அமைந்து காக்கும் அறிவுத்திறனும் உடையனாவன். இவ்வாறு ஆண்மையும், அறிவும் உடையனாய், அறிஞர் போற்ற வாழும்வேளிர் வழிவந்த எழினி ஆதன் தன்னைப் பாடி வருவார்க்கு வரையாது வழங்கும் வள்ளியோனும் ஆவன்.

பரிசில்வேண்டி வாட்டாற்றுக்கு வருவார்க்குக் கொழுத்த இறைச்சியைச் சுட்டு சுவையுடைய தாக்கி அளித்தும்; வடித் தெடுத்த மதுவை வழங்கியும், நெய்யும் முயற்கறியும் நிறையப் பெய்து ஆக்கிய அறுசுவை உணவை அளித்தும் மகிழ்விப்பன்: திறந்தது திறந்தவாறே என்றும் அடையாப் பெருவாயில் உடையதாக விளங்கும் தன் நெற்களஞ்சியத் திலிருந்து நெல்லை வாரி வாரி வழங்குவன்'.

இதில் வாட்டாற்று எழினி ஆதனின் நாட்டுவளம்; அவன் நண்பர்களைப் பேணும் நாகரீக நலம்; இரவலரைப் பேணும் கொடைவளம் ஆகியனமட்டுமே கூறப்பட்டுள்ளன நாட்டு வளம் கூறும் பகுதியில் அந் நலத்தின் ஒரு பகுதியாகக், 'கோசர் மது குடித்துக் குரவையாடும்' நலமும் கூறப்பட்டுள்ளது' அது ஒன்றையே கொண்டு, வாட்டாற்றான், கோசரால் கொல்லப்பட்டான் எனல் கருத்துக் குழப்பம் அல்லது வேறு அன்று: வாட்டாற்று எழினி ஆதன்

வேறு; செல்லூர் ஆதன் எழினி வேறு; எழினி ஆதனுக்குரிய வாட்டாற்றின் கண் கோசர், குடித்து விட்டுக்குரவை ஆடியது தவிர்த்து, எழினி ஆதனுக்கும் கோசர்க்கும் எவ்வித உறவும் இல்லை; பகையும் இல்லை :

ஆகவே, கோசர், வாட்டாற்று எழினி ஆதன் மார்பில் வேல் எறிந்து அவனைக் கொன்றனர், என்ற திருவாளர் பிள்ளை அவர்கள் கூற்று உண்மைக்கு மாறானது : என உணர்க.

# சான்றெண் விளக்கம்

1. மா.இராசமாணிக்கம் பிள்ளை, சோழர்வரலாறு, பக்-35

2. அகம்-90

3, அகம்-216

4. புறம்-396.



# 14. குறும்பியன் என்ற பெயரில் யாரேனும் ஒருவன் இருந்தனனா? அவன் கோசனா?

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1951ல்வெளியிட்ட 'கோசர்' என்ற தலைப்புள்ள ஓர் சிற்றாராய்ச்சி நூலில், திருவாளர், ரா. இராகவையங்கார் அவர்கள், குறும்பியன் என்ற தலைப்பின் கீழ்,[1] 'இவன், மறங்கெழுதானைக் கொற்றக் குறும்பியன் [2]என்பதனாற், சிறந்த படையுடைய னென்பதும், அப்படையாலெய்திய கொற்றமுடையனென் பதும் அறியப்படும். இவன் திதியனொடு துணையாய் நின்று அன்னி மிஞிலி துயர் கேட்டனன் என்பதனான் இவ னுங்கோசனென்றே துணியப்படுமென்க' எனக் கூறியதன் மூலம், குறும்பியன் என்ற பெயருடையான் ஒருவன் இருந் தான். அவனும் ஒரு கோசன் என முடித்துள்ளார், அவர்.

குறும்பியன் என்ற சொல், ஒரு தனி வீரனைக் குறிப் பதாகவே கொண்டால், அன்னி மிஞிலி, திதியன்பால் முறையிட்டது போலவே, அக் குறும்பியன் பாலும் முறை யிட்டிருக்க வேண்டும். அவ்வாறு இருவர் பாலும் முறை யிட்டிருப்பளாயின், குறும்பியன், திதியன் ஆகிய இருவர் பாலும் எனப் பொருள்தரவல்ல திதியர்க்கு எனப் பன்மை குறிக்கும் சொல் ஆளப்பட்டிருக்க வேண்டும். ஆனால், அவ்வாறு ஆளப்படவில்லை; மாறாக திதியன் ஒருவனை மட்டுமே குறிக்கும் வகையில், ஒருமை விகுதியால் திதிய னுக்கு எனப் பொருள் படும் திதியற்கு உரைத்து[3] என்று தான் ஆளப்பட்டுளது. ஆகவே முறையிடப்பட்டவர் இரு வர் அல்லர்; ஒருவரே: அவன் திதியன் மட்டுமே; குறும்

பியன் என்பான் எவனும் கண்ணுக்குப் புலப்பட்டிலன் என்பது உறுதி ஆகிறது.

திருவாளர்கள் நாவலர். ந.மு வேங்கடசாமிநாட்டார் கரந்தைக் கவியரசு. ஆர். வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர் கருத்தும் இதுவே. பாகனேரி த. வை. இளைஞர் தமிழ்ச் சங்கத்தின் 12வது வெளியீடாக 1944ல், பாகனேரி திரு. வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பட்ட அகநானூற்றுக்குத், திரு. நாட்டார் அவர்களும், கரந்தைக் கவியரசு அவர்களும் கூட்டாக எழுதிய விளக்கத்தில், "மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன், செருவியல் நன்மான் திதியற்கு உரைத்து'[4] என்ற தொடர்களுக்கு, 'வீரம் பொருந்திய படையினைக் கொண்ட வெற்றி பொருந்திய குறும்பியனாகிய போர்த்திறம் வாய்ந்த நல்ல குதிரையையுடைய திதியன் என்பானுக்குக் கூறி' எனப் பொருள் கூறியிருப்பது காண்க.

ஊர் முது கோசர் கோட்டத்தை அடக்க முனைந்த அன்னி மிஞிலி அதற்கு ஏற்புடைய பெரு வீரன் ஒருவன் துணையையே நாடுவள். அவள் திதியனை நாடினாள் என்றால் அவன்பால், அதற்கேற்ற பெரியபடை அப்படை பாடி கொள்ளற் கேற்ற கொற்ற மிகு கோட்டை, போர்த் திறம் வாய்ந்த குதிரை ஆகியன இருத்தல் வேண்டும் என உணர்ந்தாள். திதியன்பால் அவ்வளவும் இருக்கக் கண்டே, அவனை நாடினாள்.

கொற்றம் என்ற சொல் வெற்றி எனப் பொருள் படும். 'கொற்ற வேந்தே'[5]; கொற்ற வெண்குடை'[6] என்ற தொடர்களைக் காண்க. அதே போல், 'குறும்பு' என்பதும், அரண் என்னும் பொருள் உடையது. 'கொடுவில் எயினர் குறும்பு'[7] 'குழூஉக் களிற்றுக் குறும்பு'[8] 'குறும்பல்

குறும்பு'[9]; 'வில் இருந்த வெய் குறும்பு'[10] என்ற தொடர் களைக் காண்க.

ஆக, அத்தொர்டகளுக்கு, வீரம் செறிந்த படையினை யும், வெற்றிமிக்க அரண்களையும், போர்ப்பயிற்சி வாய்ந்த குதிரையினையும் உடைய திதியன் என்பதே கொள்ளும் பொருளாம்; உண்மைப் பொருளாம்: ஆக, அத்தொடரில் குறும்பியன் என்பான் எவனும் ஒளிந்திருக்க வில்லை என்பது உறுதியாயிற்று.

குறும்பியன் என்பான் எவனுமே இல்லாதபோது, அவன் கோசனா? அல்லனா? என்ற கேள்விக்கே இடம் இல்லாமல் போய் விட்டது.

# சான்றெண் விளக்கம்

1. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பக்-40.
2. அகம்–262.
3. அகம்-262
   மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
   செருவிய னன்மான் திதியற்கு உரைத்தவர்...
4. மேலது.
5. புறம்:21
6. புறம்.367
7. பெரும் பாண்:129
8. புறம்;97
9. புறம்;117
10. புறம்;386.



# 15. இளங்கோசர் தலைவன் பழையன் மாறன் முடிவு யாது?

இளம்பல் கோசர் தலைவனாய்,[1] பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் படைத் தலைவனாய்ப் பணி புரிந்து, வெள்ளம் போலும் பெரும் படையோடு கூடல் மாநகரைத் தாக்க வந்த கிள்ளிவளவனை வென்று அவனுக்குரிய களிற்றுப் படை முதலாம் படைகளையும், அவனுக்குத் துணைவந்தார் ஊர்களையும் கைப்பற்றிக் கொண்ட வெற்றி வீரன் என நக்கீரராலும்,[2] பரணராலும்[3] பாராட்டப் பெற்ற பழையன் மாறன் என்ன ஆனான்?

தமிழகத்தை வெற்றி கொள்ள வேண்டும் என்ற வேட்கை உந்த, தமிழகம் புகுந்த வடநாட்டு அரசர் முன்னணி தனக்குரிய மோகூர்க் கோட்டையைக் கைப்பற்ற வேண்டுமாயின்; வட பேரரசாம் மௌரியரின் தேர்ப்படையும் வந்தாக வேண்டும்; என்ற முடிவுக்கு வருமளவு, அவ் வட நாட்டு அரசர் முன்னணியை முறியடித்துத் தன் மோகூர்க் கோட்டையைக் காத்த காவல் வீரன் என மாமூலனாரால்[4] பாராட்டப் பெற்ற பழையன் மாறன் என்ன ஆனான்.

பரணரே விடையளித்துள்ளார். அந்த விடை இதோ; "சேரன் செங்குட்டுவனுடைய சிறந்த நண்பர்களுள், அறுகை என்பானும் ஒருவன் அறுகை பகைவர் நாடுகள் மீது படையெடுத்துச் சென்று, வென்று மீளும் வல்லமையுடையவன் அத்தகையான், ஒருமுறை, பழையன் மாறனுக்குரிய மோகூரைத் தாக்கினான். ஆனால், பெரும் படை

யும், பேராற்றலும் வாய்ந்த பழையனை வெல்லுதல் அறுகையால் இயலாது போயிற்று: பழையன் அறுகையை வென்று தொலை நாடு துரத்தி விட்டான்.

மோகூரில் தோல்வி கண்ட அறுகை நண்பர்களைக் காணவும் நாணினான். அதனால் தன் நாட்டை விட்டுப் பிரிந்து சேணாடு சென்று தலைமறைவாகி விட்டான். இதை அறிந்தான், அறுகையின் நண்பன் செங்குட்டுவன் நண்பனுக்கு உண்டான இழிவு, தனக்கு உண்டான இழிவு எனக் கருதினான். உடனே பெரும் படையோடு சென்று மோகூரைத் தாக்கினான். பழையன் தோல்வியுற்றான்: செங்குட்டுவன், அவனை அந்த அளவோடு விட்டானல்லன். பழையன் காவல் மரமாம் வேம்பை வெட்டி வீழ்த்தினான். முரசு செய்தற்கு உதவும் சிறு சிறு துண்டுகளாக்கித் தன்னூர்க்குக் கொண்டு சென்றதன் மூலம், நண்பனுக்கு உண்டான பழியைத் துடைத்தான். அதன் வழி, பழையன் மாறனை, தமிழக வரலாற்றிலிருந்தே துரத்தி விட்டான்.

> "நுண்கொடி உழிஞை, வெல்போர் அறுகை,
> சேணன் ஆயினும், கேள் என மொழிந்து,
> புலம்பெயர்ந்து ஒளித்த களையாப் பூசற்கு,
> அரண்கடா வுறீஇ அணங்கு நிகழ்ந்தன்ன
> மோகூர் மன்னன் முரசம் கொண்டு,
> நெடுமொழி பணித்து, அவன் வேம்பு முதல் தடிந்து
> முரசுசெய முரச்சிக் களிறு பல பூட்டி
> ஒழுகை உய்த்தோய்"[5]

பரணர் கூற்றுக்குச் சான்று பகர்ந்துள்ளார் சேரன் செங்குட்டுவனின் இளவல் அவர்களும்:

> "பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு
> வேம்பு முதல் தடிந்த, ஏந்து வாள் வலத்துப்
> போந்தைக் கண்ணிப் பொறைய"[6]

மோகூர்ப் பழையனைச், சேரன் செங்குட்டுவன் பழி வாங்கினமைக்கு அறுகையின் தோல்வி மட்டுந்தான் காரணமா? அன்று அப்போதைய அரசியல் சூழ் நிலையைக் கூர்ந்து நோக்கினால், வேறு காரணங்களும் புலப்படுகின்றன.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் படைத்தலைவனாய்ப் பணிபுரிந்தவன் பழையன் மாறன்[7] கூடல் மாநகரைக் கைப்பற்ற வந்த கிள்ளி வளவனை வென்று அவன் படைகளைக் கவர்ந்ததோடு, அவனுக்குத் துணைவந்த அரசர்களின் ஊர்களையும் கைப்பற்றிக் கொண்டான் என்கிறார் நக்கீரர்.[8]

அது கூறிய அவரே, சேரன், சோழன், உள்ளிட்ட எழுவரை, நெடுஞ்செழியன் தலையாலங்கானத்தே வென்ற செய்தியையும் கூறியுள்ளார்.[8] தன்மீது போர் தொடுத்து வந்த பகைவரைச் செழியன், அவர்களின் ஊர் வரைத்துரத்திச் சென்று வென்றான் என்கிறார், தலையாலங்கானப் போர் நிகழ்ச்சிகளைப் பல பாடல்கலில் விளக்கும் புலவர் இடைக்குன்றூர் கிழார்.[10]

இவற்றையெல்லாம் வைத்து நோக்கிய வழி இவையெல்லாம் தலையாலங்கானப் போரில் பாண்டியர் படைத் தளபதி பழையன் மாறன் ஆவன் என்பதற்கான வலுவான சான்றுகளாக அமைகின்றன.

அப்போரில் தோற்றோரில் சேரனும் ஒருவன். தோற்றோர் வரிசையில் முதல் இடம் வைப்பவனும் அவனே. ஆகவே, தன் குலத்தான் ஒருவனை வென்றவன் பழையன் மாறன் என்பதால் செங்குட்டுவனுக்கு அவன் மீது படை எழுவதற்கு அதுவும் ஒரு காரணமாதல் கூடும்.

சேலம், கோவை மாவட்டங்களை உள்ளடக்கிய நாடே கொங்கு நாடு, அது சேர நாட்டின் ஒரு பகுதி சேரர் 'கொங்கர் கோ' எனப் பலவிடத்தும் அழைக்கப் பட்டுள்ள னர் இலக்கியங்களில்[11] 'கொங்கிளங் கோசர்'[12] என்பதால், கோசர், கொங்கில் வாழ்ந்தனர் என்பது உறுதியாகிறது. 'இளம் பல் கோசர்' ஏவல் கேட்க தலைமை தாங்கினவன் பழையன்; அவனுக்கு உரியது மோகூர், ஆகவே அம் மோகூர் கொங்கு நாட்டில் யாண்டேனும் இருத்தல் வேண்டும் என்பது உறுதியாகிறது. அதனால், தங்களுக்கு உரிய கொங்கு நாட்டில் தன்னினும் வல்லான் ஒருவன் கோட்டை கட்டி வாழ்வதா? என மன வெம்பலும் ஒரு காரணம் ஆதல் கூடும்.

மேலும் பழையன் மாறனின் காவல் மரம் வேம்பு.
'மோகூர் மன்னன் முரசங்கொண்டு'
நெடுமொழி பணித்து அவன் வேம்பு முதல் தடிந்து[13]
'பழையன் காக்கும் குழை பயில் நெடுங்கோட்டு
வேம்பு முதல் தடிந்த.........'[14] என்ற வரிகளைக் காண்க.

ஆகவே, அவன் யாதோ ஒரு வகையில் வேம்பினை அடையாள மாலையாகக் கொள்ளும் பாண்டியர் குலத்தொடர்புடையவன் ஆதல் வேண்டும். பாண்டியர், சேரற்குப் பகைவர். அதனால் தன் குலப் பகைவர் குலத்தைச் சேர்ந்த ஒருவன் தன் நாட்டின் அண்மையில் வாழ்வதா என்பதும் ஒரு காரணமாதல் கூடும்.

# சான்றெண் விளக்கம்

1. மதுரைக் காஞ்சி–771-774
2. அகம்; 346 : 36.
3. அகம் ; 116
4. அகம் ; 251
5. பரணர் - பதிற்று-44
6. சிலம்பு ; 27 ; 124–26
7. மதுரைக் காஞ்சி-771-76

   "பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
   பெரும்பெயர் மாறன் தலைவனாகக்
   கடந்தடு வாய்வாள் இளம்பல் கோசர்
   இயல் நெறி மரபின்நின் வாய்மொழி கேட்ப'
8. அகம் : 346

   "நெடுந் நகர்,
   இழையணி யானைப் பழையன் மாறன்
   மாட மலி மறுகின் கூடல் ஆங்கண்,
   வெள்ளத்தானை யொடு வேறுபுலத்து இறுத்த
   கிள்ளிவளவன் நல்லமர் சாஅய்க்
   கடும்பரிப் புரவியொடு களிறு பல வவ்வி
   ஏதில் மன்னர் ஊர் கொள'
9. அகம்-36

   "கொய் சுவற் புரவிக் கொடித் தேர்ச் செழியன்,
   ஆலங்கானத்து அகன் தலை சிவப்பச்
   சேரல், செம்பியன் சினங்கெழு திதியன்
   போர்வல் யானைப் பொலம் பூண் எழினி,

நார் அரி நறவின் எருமையூரன்
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான்,இயல்தேர்ப் பொருநன்என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒரு பகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து உரைசெலக்
கொன்று களம் வேட்ட ஞான்று...'

10. அகம். 78
''ஈண்டு அவர் அடுதலும் ஒல்லான்; ஆண்டு அவர்
மாணிழை மகளிர் நாணினர் அறியத்,
தந்தை தம்மூராங்கண்
தெண்கிணை கறங்கச் சென்று ஆண்டு அட்டனன்'

11. பதிற்று–88; 90

12, சிலம்பு : உரைபெறு கட்டுரை.

13. பதிற்று:44

14. சிலம்பு : 27–124-125



# 16. செங்குட்டுவன் கண்ணகிக்குக் கொங்கில் கோயில் எடுப்பித்தது அடியார்க்கு நல்லார்க்கு உடன் பாடில்லை என்பது பொருந்துமா?

சேரன் மாதேவியோடு, மலை வளம் காணச் செங்குட்டு வன் சென்ற போது, அவனை வந்து வழிபட்ட கானவர், கண்ணகி, தாம் காணக், கணவனோடு வானாடடைந்த செய்தியைக் கூற, அது கேட்டு வியந்து நின்ற வேந்த னுக்கு, அவனுழை இருந்த தண்டமிழ்ப் புலவர். சீத்தலைச் சாத்தனார், சோழர் தலைநகர் புகாரில் நடைபெற்ற கண் ணகி-கோவலன் திருமணம், கோவலன்-மாதவி உறவும் பிரிவும், கண்ணகியும், கோவலனும் பாண்டியர் தலைநகர் மதுரை அடைந்தது. ஆங்குக்கோவலன் கொலையுண்டது அதனால் கொதித்து எழுந்தகண்ணகி நல்லாள், காவலன் பேரூரைக் கனை யெரியூட்டியது; பின்னர், நெடுவேள் குன்றம் கடந்து வந்து கணவனோடு வானாடடைந்த நிகழ்ச்சிகளை நிரலே விளக்கினார்.

அது கேட்ட செங்குட்டுவன், பாண்டியன் உயிர் துறக்க உடன் உயிர் துறந்த பாண்டிமாதேவி, கணவன் கொலை யுண்டு போகப், பழிக்குப் பழி வாங்கி விட்டுத் தன்னாட டைந்த கண்ணகி, ஆகிய இருவரில் "நன்னுதல்! வியக் கும் நலத்தோர் யார்?" எனத் தன் அருகில் இருந்த அரச மாதேவியைக் கேட்க, அவள் 'காதலன் துன்பம் காணாது கழிந்த மாதரோ, பெருந்திரு உறுக வானகத்து; அத்தி

யும் நிற்க; நம் அகனாடு அடைந்த இப்பத்தினிக் கடவு ளைப் பரசல் வேண்டும்'[1] என்ற வேண்டுகோளை வைக்க அவ் வேண்டுகோள் ஏற்ற செங்குட்டுவன், வஞ்சிக்கண், கண்ணகிக்கு கற்கோயில் கட்டி, நித்தல் விழாவுக்கு வகை செய்தான்.

கண்ணகிக்குக் கற்கோயிலுக்கு வழிசெய்து விட்ட சாத்தனார், கற்கோயில் கால வெள்ளத்தால் நிலை குலைந்து போகக் கூடியது, ஏன், காணாமலே போகவும் கூடியது: நிலை குலையாது காணக் கிடக்கினும், உம் முடையதா, எம்முடையதா என்ற வழக்கிற்கு உள்ளாகக் கூடியது. என்றெல்லாம் முன் கூட்டியே அறிந்திருந்தமையால், எக்காலத்தும் அழிவுக்கும், அழிவழக்கிற்கும் உள்ளாகாத கலைக் கோயில் கட்ட விரும்பினார். அதனால் கண்ணகி வானாடு அடைந்த செய்தியைச் செங்குட்டுவனுக்குக் கூறிய கானவர்களைத் தலைநகர்க்கு அழைத்துச் சென்றனர்.

அவர்களை, ஆங்குக் குணவாயில் கோட்டத்தில், அரசு துறந்து அறவுரை வழங்கிக் கிடக்கும் இளங்கோ அடிகளார் முன் நிறுத்தி, செங்குட்டுவன் பால் கூறியதை, அவர்களைக் கொண்டுக் கூறச் செய்தும், தாம் ஆங்குக் கூறியதைத் தாமும் கூற, அடிகளார், "சிலப்பதிகாரம் என்னும் பெயரால், நாட்டுதும் யாம், ஓர் பாட்டுடைச் செய்யுள்" எனக் கருத்து அறிவிக்க, அது கேட்ட சாத்தனார், அடிகளாரை நோக்கி, 'முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது; அடிகள்! நீரே அருளுக' என வேண்டிக்கொள்ள, இளங்கோ அடிகளார் உரையிடை இட்ட பாட்டுடைச் செய்யுளாம், இறவா இலக்கியப் பெருங்கோயிலைக் கட்டி வழங்கினார்.

கண்ணகி நல்லாளுக்குக் கோயில் கட்டுமாறு சேரன் மாதேவி விடுத்த வேண்டுகோளைச் செங்குட்டுவன் மறுக்க

வில்லை. உடன் இருந்த தண்டமிழ் ஆசான் சாத்தனார் மறுக்க வில்லை; நின் மூத்தோன் கற்கோயில் கட்டிவிட் டான்; நீ கலைக்கோயில் கட்டுக' என்ற வேண்டுகோளை சாத்தனார் விடுத்த போது, இளங்கோ அடிகளார் மறுக்க வில்லை சிலம்பு ஒலிக்க, அதற்கு முதற்கண் உரை எழுதிய அரும்பத உரையாசிரியர் மறுக்க வில்லை;இவர்கள் எல்லாம் ஏற்றுக் கொண்ட ஒன்றை, அடியார்க்கு நல்லார் ஏற்க வில்லை, என்கிறார், திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951ல் வெளி யிட்ட 'கோசர்' என்ற ஓர் சிற்றாராய்ச்சி நூலில், செங்குட் டுவன் கண்ணகிக்குக் கொங்கில் கோயில் எடுப்பித்தது அடியார்க்கு நல்லார்க்கு உடன்பாடு இல்லை' என அவர் கூறியிருப்பது காண்க.

இதற்கு அவர் காட்டும் காரணம், 'குடக் கொங்கர் என்பார் குடகுப் புறத்து நின்று கொங்கில் தங்கி உள்ளார் என்று இவர் (அடியார்க்கு நல்லார்)கருதினார் ஆவர், இக் கருத்துக் 'கொங்கிளங் கோசர் என்னுந் தொடர்க்குஅவர் கூறிய உரையான் உய்த்துணரப்படுவது'[3] என்பதுவே.

'குடகக் கொங்கர் என்பார், குடகபுறத்து நின்று கொங் கில் தங்கியுள்ளார்' என்று அடியார்க்கு நல்லார் கருதி னார் போலும் 'என திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள் கூறியிருப்பது அவரது வெறும்கற்பனை அல்லது கருத்துச் செறிவுடையது அன்று: அடியார்க்கு நல்லார் அவ்வாறு கருதினார் என்பதற்குத், திருவாளர். அய்யங் கார் அவர்கள் காரணம், 'இக் கருத்து, கொங்கிளங் கோ சர்' என்னும் தொடருக்கு அவர் கூறிய உரையான் உய்த் துணரப்படுவது' என்பதே.

'கொங்கிளங் கோசர்' என்பதற்கு அடியார்க்கு நல்லார் கூறிய உரைதான் என்ன?' கொங்கு மண்டலத்து இளங் கோவாகிய கோசர்' என்பதே அடியார்க்கு நல்லார் கூறிய உரை; கொங்கில் கோவில் கட்டியது அடியார்க்கு நல் லார்க்கு உடன்பாடில்லை என்பதற்கு, இந்த உரை எவ் வாறு ஆதாரம் ஆகும்?

அடிப்படையில்லா ஒன்றை ஆதாரமாகக் கொண்டு, அடியார்க்கு நல்லாரையும் மயக்கத்தில் ஆழ்த்திவிட்டு, தாமும் ஆழ்ந்து போனதோடு நில்லாமல், 'குடகக் கொங் கர் என்பது கொங்கினின்றும் குடகடல் புறத்துக் குடியேறி னாரை நன்கு குறிக்கும் என்று உணர்க. கொங்கிற் குடகர் என்றால் அடியார்க்கு நல்லார்கருத்து நன்குபொருந்தும். அங்ஙன மல்லாது குடகக் கொங்கர் என்றலாற் குடகப் புறத்தும் கொங்கர் என்ற பெயரையே யுடையர் என்று தெளிய நிற்றல் காண்க'[4] எனக் கூறி, மேலும் குழம்பியுள் ளார். குழப்பியுள்ளார்.

குடக நாடு வேறு அதில் வாழ்வார் குடகர்: கொங்கு நாடு வேறு அந்நாட்டில் வாழ்வார் கொங்கர்,குடகர் வேறு கொங்கர் வேறு வேட்டுவ வரியில், இளங்கோ அடிகளார் இவ்வேறுபாடு நன்கு தோன்ற கண்ணகியை வேட்டுவர் வாயில் வைத்து 'இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி'[5] என்று பாராட்டியிருப்பதும் அதற்கு அடியார்க்கு நல்லார், 'இங்கிருக்கின்ற இவள் கொங்கு நாட்டினை ஆளும் செல்வி; குட நாட்டினை ஆளும் செல்வி, எனக் கொங்கு நாடுவேறு குடநாடு வேறு என்பது தெளிவாக உரை கூறியிருப்பதும் காண்க.

குடகர்க்குத் தனிநாடு இருந்தது போல் கொங்கருக் குத் தனிநாடு இருந்ததுபோல், கோசர்க்குத் தனி நாடு எதுவும் இல்லை: நாடோடி வாழ்வினர்கோசர். ஒரு காலை சோணாட்டுக் கடற்கரைக் கண்ணதான செல்லூர்க்கு அணித்தான நியமத்தில் வாழ்ந்தனர்

பிறிதொரு காலை பாண்டி நாட்டின் கண்ணதான மோகூ ரில் வாழ்ந்தனர். நாமக்கல் என இப்போதுவழங்கப்பெறும் நான்மொழி நாட்டிலும் வாழ்ந்திருந்தனர். இதைத் திருவா ளர் ரா. இராகவையங்கார்அவர்களும் ஒப்புக் கொண்டுள் ளார். 'கோசர் என்ற தலைப்பிட்ட தம் சிற்றாராய்ச்சி நூலில் அவர், 'கோசர் முதலில் கொங்கில் வதிந்தவரென் றும், பின்னர்க் குடகடற் பக்கத்து மலை நாட்டிற்குடியேறி யவரென்றும் துணியப்படுதல் காண்க.'[6] என்று கூறும் அவர், தொடர்ந்து 'மதுரைக் காஞ்சியில் இவரை, நான் மொழிக் கோசர் தோன்றியாங்கு' என்று கூறப்பட்டிருப்ப தை, நான்மொழி நாட்டுக் கோசர் எனக் கிடந்த படியே பொருள் கொள்ளலாம் எனவும் முற்காலத்து நான்மொழி நாடென ஒன்றுண்டென்பது சாசன ஆராய்ச்சியாளர் கண் டது திருவறைக் கல்லும் நான் மொழி நாடும் உடைய வத்தராயனான விடுகாதன்[7] என்றவரிகளால் இதை அறிய லாம். இத் திருவறைக் கல் இக் காலத்து நாமக்கல் என வழங்குவதென்று துணியப்படுவது என்றும் கூறியுள்ளார்.

ஆக, உரைபெறு கட்டுரையில் வரும், 'கொங்கிளங் கோசர்' என்ற தொடருக்குக், 'கொங்கு மண்டலத்து இளங்கோவாகிய கோசர்' என அடியார்க்கு நல்லார் கூறியிருக்கும் பொருளில் குழப்பம் எதுவும் இல்லை. குழப் பம் இல்லா உரையில் குழப்பம் இருப்பதாகக் கொண்டு கண்ணகி நல்லாளுக்குக் கோயில் கட்டியதே, அடியார்க்கு நல்லார்க்கு உடன்பாடில்லை என அவர் மீது, மாபெரும் பழி சுமத்தி இருப்பது பொருந்தாது.

# சான்றெண் விளக்கம்

1. சிலம்பு : காட்சி : 111-114.
2. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பக்-1,2
3. மேலது—பக். 2.
4. மேலது-பக். 2
5. சிலம்பு-வேட்டுவ வரி-47
6. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பக்-3
7. Topographical List of south Indian Inscriptions No. 213-II of 1906.



# 17. கோசர் யார்? யாது அவர் முடிவு

அகுதையைக் காத்து அறப்பணி ஆற்றியவர் கோசர்; நன்னன் நறுமா கொன்று, பெண் கொலை புரிந்த நன்னனைப் பழி தீர்த்துக் கொண்டவர் கோசர் அன்னி மிஞிலியின் தந்தையின் கண்களைப் போக்கி, அழுந்தூர்த் திதியனால் அழிவுண்டவர் ஊர் முது கோசர் மோகூர்ப் பழையனுக்கு நண்பரா, பகைவரா என்ற வினாக்குறி எழுப்பி நிற்பவர் கோசர்; யார் இந்தக் கோசர்? யாது அவர் முடிவு.

பொலம் பூண் கிள்ளியைக் கோசர் படை அழித்ததா? அல்லது பொலம் பூண் கிள்ளிபடையால் கோசர் படை அழிவுற்றதா? வாட்டாற்று எழினி ஆதனைக் கோசர் கொன்றனரா? திதியன் கோசர் குலத்தவனா? தழும்பன் கோசர் மரபினனா? ஆதன் எழினி கோசர் இனத்தவனா? குறும்பியன் என்ற பெயரில் படைமறவன் எவனேனும் இருந்தனனா? இருந்திருந்தால் அவன் கோசர் வழி வந்தவனா? பழையன் மாறன் முடிவுயாது? அவன் மோகூர், அதாவது மோரியர் தாக்கிய மோகூர் யாண்டுளது? கண்ணகிக்கு, கொங்கில் கோயில் கட்டியது, அடியார்க்கு நல்லார்க்கு உடன்பாடில்லை என்பது உண்மையா? என்பன போலும் கேள்விக்கணைகளுக்கு ஒத்த விடைகாணமாட்டாது, வரலாற்றுப் பேராசிரியர்களை, ஒருவரோடு ஒருவரை, கருத்து வேற்றுமையில் மோதவிடக் காரணமாக நிற்கும் இக்கோசர் யார்? யாது அவர் முடிவு.

அடியேன் (புலவர் கா கோவிந்தன்) கருத்து :

திருநெல்வேலித், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1955ல் வெளியிட்ட, சங்ககால அரசர்

வரிசை என்ற வரிசையில், ஆறாவது வரிசையாகிய; திரையுன் முதலிய 29 பேர்கள்' என்ற நூலில்,

'என் ஆட்சிக்கு அடி பணியாது, என் அரசோடொப்ப அரசோச்சிய பெருமை வாய்ந்த பேரரசுகள்' என மௌரியப் பேரரசன் அசோகனால், சிறப்பித்துக் கூறப்பெற்ற தென்னிந்திய அரச இனங்கள் நான்கனுள், சத்ய புத்ரர் இனமும் ஒன்று: இச் சத்திய புத்ரரே, கோசராவர் என வரலாற்று நூலாசிரியர் பலரும் கருதுவர்'[1] எனக்கூறி, வரலாற்றுப் பேராசிரியர்கள் பால் பொறுப்பினை ஏற்றி விட்டு நான் தப்பித்துக் கொண்டேன்.

வரலாற்றுச் சான்று ஏதேனும் காட்டினேனா? எந்த வரலாற்றுப் பேராசிரியர்களையாவது துணைக்கு வைத்துக் கொண்டேனா? என்றால் இல்லை!

திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் கருத்து :

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951ல் வெளியிட்ட 'கோசர்' என்ற தலைப்பிட்ட ஓர் சிற்றாராய்ச்சி நூலில் திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள்,

'இனி வால்மீகி ராமாயணம் 32ஆம் சருக்கத்து,' பிரமற்கு மகனாராகிய குசர் என்பார் பெருந்தவம் புரிந்து நோன்புகளைத் தவறாது செய்து தருமங்களையுணர்ந்து பெரியோர்களைப் பூசித்து பெருமை பெற்றிருந்தார். அந்த மகாத்மா நற்குலத்தில் பிறந்து நல்லொழுக்க மிக்க வைதர்ப்பி என்பவளிடத்தில், நற்குணங்களால் தம்மையொத்த குசாம்பன், குச நாபன், ஆதூர்த்தரஜஸ், வஸு என்னும் பெயருள்ள நான்கு புதல்வரைப் பெற்றார். குசர் க்ஷத்ரிய தர்மத்தைச் செய்வதில் விருப்புமிக்கவராகி ஒளி நிறைந்தவரும், பெரிய ஊக்கமுள்ளவரும் தருமத்தில் நிற்

பவரும் வாய்மையே பேசுகின்றவரும் ஆன அப்புதல்வர் வரை நோக்கிக், குடிகளைப் பாது காத்தல் செய்யுங்கள், தர்மத்தை நிரம்ப அடைவீர்கள் என்று சொன்னார்,

உலகிற் கொத்த நாரில் சிறந்த அந் நால்வரும் குச ருடைய வார்த்தையைக் கேட்டு, அப்போதே நான்கு நகரங்களில் புகலாயினர். ராம பேரொளி நிறைந்த குசாம்பர், கௌசாம்பிஎன்ற நாமபுரியை உண்டாக்கினார். தர்ம சிந்தையர் ஆகிய குசநாபர், மஹோதயம் என்னும் புரத்தை உண்டாக்கினார் ஆதூர்த்த ரஜஸ் என்னும் மகிபதியானவர் புரங்களில் சிறந்த தர்மாரண்யம் என்னும் ஊரை உண்டாக்கினார். வஸு என்பவர் கிரிவ்ருஜம் என்பதை உண்டாக்கினார்'.

எனக் கூறப்படுதலான், குசர் என்பவரின் மக்கள் நாலூர்களைப் படைத்தனர் என்பது கேட்கப்படுவது. இக்குசர் வழியினர் கௌசர் எனப்பட்டு அவரே கோசர் எனப் பட்டனர் என்றும், இவர் முதல்முதலாக நாலூரினின் றும் பெருகியதனால் நாலூர்க் கோசர் எனப் பெயர் சிறந் தனரென்றும் கருதுவது மிகவும் பொருந்தியதாகும்' எனக் கூறியுள்ளார்.[2]

திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்களும், கேட் கப் படுவது, 'கருதுவது' என்றுதான் கூறியுள்ளாரே யல்லது, கல்வெட்டுச் சான்றோ, இலக்கியச் சான்றோ காட்டினார் அல்லர்.

'கோசர்' என்ற தம் சிற்றாராய்ச்சி நூலின் ஓரிடத்தில் கோசரைக் குசர் என்பார் வழியில் வந்தவர் எனக் கூறிய திருவாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் அதே நூலின் பிறிதோரிடத்தில்,[3] கோசர், கைக்கோளர் ஆவர் என்றும் கூறியுள்ளார், அவர் கூறுவது பின் வருமாறு.

1) "கோசர் பிற்காலத்துப் பாண்டியர்கட்கும் கைக் கோட் சேனாபதிகள் என்னும் பெயருடையராயிருந்தது, இப்படிச் சம்மதித்து விலைப் பிரமாணம் பண்ணிக் கொடுத் தோம் ஆதி சண்டேச்சுர தேவர்க்கு திருநெல்வேலி கைக் கோட் சேனாபதிகளோம். இவை அதிசய பாண்டிய வத் தராயன் எழுத்து இவை விக்கிரம பாண்டிய வத்தராயன் எழுத்து[4] என வருதலானறியப்படுவது.

2) இவர் சோழர் கைக் கோட் படையாளராகவும் இருந்தனர் என்பதும் சாசனங்களால் அறியப்படுவது. 'திரிபுவன வீரதேவன் மெய்கீர்த்தியில்,'[5] சாமரையும் கோசராணையும் மேம்பரியும் கொடித்தேருங் குஞ்சரமும் வைகை நாடும் சோழர் கொண்டாரெனத் தெரிதலால் அறியலாம்.

3) ஸ்ரீராஜராஜதேவர் கைக் கோட் படை, பராந் தகன் தெரிந்த கைக் கோளரும், சுந்தர சோழர் தெரிந்த கைக் கோளரும்[6] என்பதால் அறியலாம்.

4) நம்பிராட்டியார் நேரியன் மாதேவி யகப் பரிவாரத் துக் கைக்கோளன் சோறுடையான் அருக்கனான அன்பார பாணாதிராயன் என வருதலான் அறியப்படுவது

5) பாண்டிய குலாசனி தெரிஞ்ச கைக் கோளரும், அபிமான் பூஷண தெரிஞ்ச கைக்கோளரும்[8] என்பவற்றால் அறியப்படும்.

மேலே காட்டியுள்ள அகச் சான்றுகளில், முதலாவதில் கையெழுத்து இட்டவர்கள் பெயர்களில் தான், கோசர் மூலம் குறிக்கும் வத்தவராயர் என்ற பெயர் வந்துளது.

அதனாலேயே, அதில் கண்டுள்ள சேனாபதிகள் கோ சர் ஆகிவிடார். அதனாலேயே அவர்கள், கோசரின் வேறு

பட்ட கோளர் என்பதை வற்புறுத்த அவர்கள் 'திருநெல் வேலி கைக் கோட் சேனாபதிகள்' என வேறு பிரித்துக் காட்டப்பட்டுள்ளனர்.

எடுத்துக்காட்டு இரண்டில், 'இவர் சோழர் கைக்கோட் படையாளராகவும் இருந்தனர்' எனக் கூறினாலும், காட்டியுள்ள சாசனப் பகுதியில், கைக்கோளரைப் பற்றிய குறிப்பு எதுவும் இல்லை. 'கோசரானை, குறிப்பிடப் பட்டுளது என்றாலும், அவர்களைக் கைக்கோளரோடு தொடர்பு படுத்தும் குறிப்பு எதுவும் இல்லை,

ஏனைய எடுத்துக் காட்டுக்கள் 3,4. 5, 6, ஆகியவற்றில் கைக் கோளர் குறிப்பிடப் பட்டிருந்தாலும், கோசர் பற்றிய குறிப்பு எதுவும் இல்லை.

அடிப்படை சான்று எதுவும் இல்லாத நிலையில் கைக் கோளர்களைக் கோசர்களாகக் கொண்டு, 'கோசர்' என்ற சொல், 'கோயர்' என்று ஆகி, அது மீண்டும் 'கோளர்' என ஆகிவிட்டது என வாதிடுவதில்[9] வலுவில்லை.

மேலும், கூறிய எடுத்துக்காட்டுகளில் கோளர் இடம் பெற்றிருக்கும் ஐந்திலும், அவர்கள் ஒழுக்கத்தை உடைய வர் என்பதை உணர்த்தவரும் 'கை' என்ற சொல் அடை யாக வரக் 'கைக் கோளர்' என்று தான் கூறப்பட் டுள்ளதே அல்லது, 'கோளர்' என அடையின்றிக் கூறப் படவில்லை என்பது, அவர்களைக் குறிக்கும் 'கோளர்' என்ற சொல், 'கோசர்' என்பதன் திரிபு அன்று என்பதை உணர்த்தும்,

## திருவாளர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்களின் கருத்து :

கோசர், குசர் வழி வந்தவர் என்ற கொள்கையைச் 'சேர மன்னர் வரலாறு' என்ற தம் நூலில் சிந்தாந்த கலா

நிதி ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் மறுத்துள்ளார். திருவாளர். ரா. இராகவையங்கார் அவர்கள் கூறியதை மறுத்ததுடன் அமையாது திரு. ஔவை. அவர்கள் 'கோசர்' பற்றி வேறு விளக்கங்களையும் தம் நூலில் அளித்துள்ளார். அவர் கூறியிருப்பது வருமாறு:

'தைகிரிஸ் (Tigiris) நதிக்குக் கிழக்கில் 'சகராசு (Zagros) மலைப்பகுதியில் வாழ்ந்த பழங்குடி மக்கட்குக் 'கோசர்' (Kossears) என்பது பெயர். வில் வேட்டம் புரிவதே அவர் தொழில். பின்னர் அவர்கள், மலையடி வாரத்தில் வாழ்ந்த இரானியர்களான 'கிருதர்' (Kurds) 'அனுசர்' (Anshar) முதலியோருடன் கலப்புற்றனர் அவர்கள் அனைவரையும் கிரேக்கர்கள் கிசியர் (Kissiars) என்றும் அவர்கள் நாட்டை கிசியா என்றும், அவர்களது தலைநகரை சூசா (Susa) என்றும் வழங்கினர். சூசா என்பது அவர்கள் மொழியில் நான்கு ஊர்கள் என்றும், நான்கு மொழிகள் என்றும் பொருள்படும்.

இக் கோசர்கள் மேலைக் கடற்கரையில் வந்து தங்கிய யவனருடன் போந்து, துளு நாட்டுக் கடற்கரைப் பகுதியில் தங்கி வாழ்ந்தனர். துளுநாட்டின் கால நிலையும், மலை வளமும், தங்களுடைய தாயகமாகிய பாபிலோனிய நாட்டைப் போலவே இருந்தமையால். தங்கள் சொந்த நாட்டிற்குத் திரும்பிப் போக மன மின்றித் துளுநாட்டிலேயே தங்கினர். அவர்கள் தங்கள் நாட்டில் நாடோடி வாழ்க்கை நடத்தியதால், தங்கட்கு எனத் தனி நாட்டை அமைத்துக் கொள்ளாமல் கொங்கு நாட்டில் இருந்த வேளிர்களுக்கு விற்படை மறவராக வாழ்ந்து வருவாராயினர். கொண்கான நாட்டு வேளிர் தலைவர்களும், பாயல் மலை நாட்டுத் தலைவர்களும், இக் கோசர்களையும், தமக்குப்படை வீரர்களாகக் கொண்டனர். நன்னன் மரபினர், கொங்கு நாட்டில் பரவிய பொழுது, அவர்களோடு இக்கோசர்களும் சென்று தங்கினர்.

"முதுமையிலும் இளமைப் பண்பு வாடாத உள்ளமும், சொன்ன சொல் பெயராத வாய்மையும் சிறப்பாக உடைய ராதலால், இக் கோசரைச் சங்கப் புலவர்கள், 'ஒன்று மொழிக் கோசர்' என்று கூறியுள்ளனர். இக் கோசருள் சிலர், இளங்கோசர் இளம்பல் கோசர்' என்று கூறப் பட்டனர். பாபிலோனியாவில் இருந்து முதலில் வந்தோ ரை மூத்தோர் என்றும், பின் வந்தோரை இளையோர் என்றும் குறிப்பது தமிழ் வழக்கு. அதனால் பின் வந்த கோசர் இளங்கோசர் எனப் பெற்றனர்'[10]

இவ்வாறு கூறிய திருவாளர் ஔவை அவர்கள் தம் கூற்றிற்கு ஏதேனும் அகப் புறச்சான்றுகள் காட்டினாரா என்றால் இல்லை!

டாக்டர் அ. கிருட்டிணசாமி அவர்கள் கருத்து :

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினரால் தொகுக்கப் பெற்று தமிழ் வளர்ச்சி இயக்ககத்திற்காக, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1986ல் வெளியிட்ட 'தமிழ் நாட்டு வரலாறு—சங்க காலம்: அரசியல்' என்ற தலைப்பிட்ட நூலில், 'கொங்கர்' பற்றிய வரலாறு எழுதிய திருவாளர் டாக்டர். அ. கிருட்டிணசாமி அவர்கள், தம்கட்டுரையில், திருவாளர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்களின் கூற்றை மறுத்துள்ளார்.

மேற் கூறப் பெற்ற செய்திகள் உண்மை வரலாற்றுச் செய்திகளா என்று ஆராயத் தக்க தாகும். பாபிலோனிய நாட்டில் இருந்த கோசியர் (Kosseers) என்போர் தமிழ் நாட்டிற்கு வந்து குடியேறினர் என்பதற்கு, 'வரலாற்றறி ஞரின் உலக வரலாறு' (Historiyans History,of the world) என்னும் நூலில் மேற்கோள் தவிர வேறு உள் நாட்டுச்

சான்றுகளைப் பிள்ளையவர்கள் காட்டவில்லை. அவர்கள் எந்தக் காலத்தில் கொண்கானத்திற்கு வந்தனர்? ஏன் வந்தனர்? என்ற கேள்விகளுக்குப் பதில் கிடையாது. ஆகையால், கோசர்கள் பாபிலோனியா நாட்டிலிருந்து கொண்கானத்தில் குடியேறினர் என்பது அறிஞர்கள் ஒப்புக் கொள்ளக் கூடிய செய்தியாகாது'[11] எனக் கூறித் திருவாளா ஒளவை அவர்களின் முடிவை மறுத்துள்ளார்கள்.

மேற் கூறியவாறு, திரு. ஒளவை அவர்களின் கூற்றை மறுத்த திருவாளர். டாக்டர். அ. கிருட்டிணசாமி அவர்கள், அவ்வாறு மறுத்தமைக்கான காரணங்கள் எவற்றையேனும் காட்டினாரா என்றால் இல்லை; வறிதே, அறிஞர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்' என்பது வாத நெறியாகாது. திருவாளர். ஒளவை அவர்கள் கூற்றை மறுத்துவிட்ட திருவாளர் கிருட்டிணசாமி அவர்கள், 'பிறன் கோள் மறுத்து தன் கோள் நிறுவுவது' என்ற வாத நெறிப்படி இதுதான் முடிவு என முடித்துக் காட்டினாரா? என்றால் இல்லை :

திருவாளர் ஒளவை அவர்கள் கூற்றை மறுத்து விட்டு அவர் கூறி யிருப்பதெல்லாம் இவ்வளவே, 'கோசர்களைக் கொண்கான நாட்டில் தொன்று தொட்டு வசித்து வந்த மறக்குடி மக்களாகவே நாம் கொள்ளவேண்டும், பேரரசன் அசோகருடைய பாறைக் கல்வெட்டில் காணப்படும் 'சத்திய புத்திரர்' என்னும் சொற்றொடர், 'வாய் மொழிக் கோசர் 'ஒன்று மொழிக் கோசர்' என்ற சங்க நூல்களில் பயின்று வரும் தொடர்களுக்கு ஒற்றுமை யுடையதாக நாம் கொள்ளலாம், ஆகவே கோசர்கள் அயல் நாட்டினர் அல்லர் என்பது தெரியப்படும்'[12] என்ற இவ்வளவே. 'கோசர்கள் அயல் நாட்டினர் அல்லர்' என்ற தம் முடிவுக்கு அவர் ஏதேனும் அகச் சான்று காட்டினரா? என்றால் இல்லை. 'நாம் கொள்ள வேண்டும்', கொள்ளலாம்' என்பன போலும் சொற்றொடர்கள் வரலாற்றுச் சான்றுகள் ஆகிவிடா.

டாக்டர். சி. ஈ, இராமச்சந்திரன் அவர்கள் கருத்து :

சென்னைப் பல்கலைக் கழகம் 1974ல் வெளியிட்ட 'வரலாற்று நிலையில் அகநானூறு' (Ahananuru in its Historical Setting) என்ற தம் நூலில் சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறைத் தலைவராக விளங்கியவரான டாக்டர் சி. ஈ. இராமச்சந்திரன் அவர்கள்,

'கோசர் யாவர் என அடையாளம் காண்பது, மிகப் பெருமளவிலான விவாதத்திற்கு உரியது ஒன்று. திருவாளர்கள். வி. ஏ. ஸ்மித்[13] வி. ஆர். இராமச்சந்திர தீக்ஷதர்[14] போல்வார், அசோகனின் பாறைக் கல்வெட்டில் குறிப்பிடப் பட்டிருக்கும் 'சத்யபுதரர்' அல்லது சத்திய புத்ரர்களோடு கோசர்களை இனங்காட்டும் போது, திருவாளர். கே. ஏ. நீலகண்ட் சாஸ்திரியார் அவர்கள், அவ்விருவர்களும் (சத்யபுதரர், சத்தியபுத்ரர்) ஒருவரோடு ஒருவர் மாறுபட்டவர் என நினைவூட்ட விரும்புகிறார்; சத்யாபுத்ரர் என்ற சொல், அதியமான்க்ள் எனற சொல்லி லிருந்து பெறக்கூடியதாம் என்ற, திருவாளர் பர்ரோ அவர்களின் கருத்தை ஏற்றுக் கொண்டுள்ளார்[15] திருவாளர். டாக்டர் என். சுப்பிரமணியம் அவர்கள்[16] கோசர் யார் என்பதைப் பற்றிய விரிவான ஆய்வினைச் செய்து விட்டு, இப்போது கிடைக்கும் அகச் சான்றுகளின் அடிப்படையில், கோசர்களைச் சத்திய புத்திரர்களாகக் கொள்வதே பொருந்தும் முடிவாகத் தெரிகிறது என முடித்துள்ளார்' என்று எழுதி முடித்தார்[17]

அதில், திருவாளர் வி. ஏ. ஸ்மித் முதல் திருவாளர் டாக்டர். என். சுப்பிரமணியம் வரையான வரலாற்றுப் பேராசிரியர்கள் கூறியிருப்பன இன்னின்ன என்பதைத் தான் குறிப்பிட்டுச் சென்றுள்ளாரே யல்லது, கோசர் பற்றிய தமகருத்து இதுதான் என்பதைத் திட்டவட்டமாகக் கூறவில்லை.

திருவாளர். வி. ஏ. ஸ்மித் அவர்கள் கருத்து :

'இந்தியாவின் பண்டைய வரலாறு' (Early History of India) என்ற நூலின் ஆசிரியராகிய திருவாளர். வி. ஏ. ஸ்மித் (V. A. Smith) அவர்கள், கோசரர்வர் என வரலாற்றுப் பேராசிரியர்களால் கருதப்படும், அசோகன் பாறைக் கல்வெட்டில் குறிப்பிடப் பட்டிருக்கும், 'சத்யபுத்ரர்' பற்றி 'துளுமொழி பேசப்படும், மங்களூரைத் தலைமைஇடமாகக் கொண்ட சிறிய நாடே, சத்யபுத்ரர் நாடாகக் கொள்ளலாம்'[18] எனக் கூறிவிட்டு, அடிக்குறிப்பில் பின்வருமாறு கருத்து தெரிவித்துள்ளார்.

'திருவாளர். ஏ. ஜி. சாமின், அவர்களின் கண்டுபிடிப்பு ஒன்று சத்யபுத்ரர் என்ற பெயர் பற்றிய விளக்கம் பெற உதவும் குறிப்பு ஒன்றைத் தருகிறது. அவர் கூறுகிறர்' பிரிஹத் சரணர் (Brihat Charana)அல்லது நாடு விட்டு நாடு பெயரும் பெரிய —.

என அழைக்கப்படும் தமிழ் பிராமணர்கள், மகத நாடு) மற்றும் மொலகு என இரு பிரிவாகவும், மொலகு பிரிவினர் மீண்டும் கண்டர–மாணிக்கம்(Kandra Manikkam) மாங்குடி [Mangudi]; மற்றும் சத்திய மங்கலம் [ Sathiya Mangalam ] எனப் பிரிவு பட்டனர், மேற் கூறிய அனைத்தும் மேற்கு மலைத் தொடர்ச்சியை ஒட்டிய மேட்டு நிலங்களைத் தேர்ந்து கொண்டு, இன்றைய மைசூர் மாநிலம், மலபார், கோவை மற்றும் மதுரை மாவட்டங்களைச் சார்ந்த சிற்றூர்களில் வாழத் தொடங்கி பின்னர் மேற்குக் கடற்கரை வரை பரவலாயினர்'[19]

தொடர்ந்து அசோகன் குறிப்பிடும் சத்ய புத்ரா நாடு, சத்திய மங்கலமாம் என்றே நான் [வி. ஏ, ஸ்மித்] கருதுகின்றேன், சத்ய புத்ரர் நாடு, பூனாவை அடுத்துள்ள மலையிடை நாடு எனப் பேராசிரியர் பந்தர்கர் கூறுவதை,

நான் ஏற்றுக் கொள்ள இயலாது. அது உண்மையில் ஒரு தமிழ் நிலமே. நான் கொண்ட கருத்தே முறையானது என நான் நம்புகிறேன்' என முடித்துள்ளார்,[20]

திருவாளர் வி, ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்கள் கருத்து :

இந்திய நாகரீகம் என்ற ஆய்வு இதழில், 'கோசர்' தென்னிந்திய வரலாற்றில் அவர்கள் இடம்' என்ற தலைப்பில் எழுதியுள்ள தம் கட்டுரையில்[21] திருவாளர் வி, ஆர் இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்கள் பின் வருமாறு கூறியுள்ளார்.

"பண்டைத் தமிழரின் சங்க இலக்கியங்கள் பழங்குடியினர் பலரைக் குறப்பிடுகின்றன அவர்களில் கோசர் இனம் தென்னிந்தியாவின் பண்டைய வரலாறு எழுதுவோர்க்கு விளங்காப் புதிராகவே உளது.

கோசர் தமிழ் நாட்டிற்கே உரியவரா அல்லது வெளிநாட்டவரா என்ற கேள்வி தென்னிந்திய வரலாறு எழுதுவோர் கவனத்தை இன்னமும் ஈர்த்துக் கொண்டேதான் உளது. அவர்கள், தமிழகத்திற்கு அப்பாற்பட்டவர் என்ற கொள்கைக்கு ஆதரவான நல்ல சான்று எதுவும் இல்லை அவர்களை அடையாளம் காணப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன,

அமரர் கனகசபை அவர்கள் '1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்' என்ற தம் ஆங்கில நூலில், 'கோசர் என்பவர் குஷானர்களேயன்றி வேறல்லர் : இவர்களில் ஒரு கிளை கி.மு. 2ஆம் நூற்றாண்டில் பாக்டிரியாவையும் கி.மு. 1ஆம் நூற்றாண்டில் இந்தியாவின் வடமேற்கு பகுதியையும் வென்று கைக் கொண்டார்கள். அவர்கள் யூச்சி மரபின் நான்கு கிளைகள்'[22] எனக் கூறியுள்ளார்,'

அங்ஙனமாயின் கோசர் மண்ணின் மைந்தர்கள் அல்லராகக் காணப்படுவர். அது உண்மையாயின் அவர்கள் சேரநாட்டின் வடக்கே மலபார் கடற்கரையை ஒட்டிக் குடியேறிய வெளி நாட்டவராவர்.

ஆனால், கோசர்களைக் குஷானர்களாகக் கொள்வது சிறிது கடினமே, அசோகன் காலத்திற்கு முன்னர் தென்னாட்டின் மீது மோரியர் படையெடுப்பு ஒன்று இருந்தது என்பது பேராசிரியர்கள் அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது, இந்த உண்மையின் அடிப்படையிலும் அடுத்துக் காட்டப்படும் காரணங்களாலும், கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் ஏன் அதற்கும் முற்பட்ட காலத்தில், இந்தக் கோசர், தமிழ் நாட்டின் நிலைத்த குடியினராகி விட்டனர். தங்களுக்கெனத் தனிநாடு வகுத்துக் கொண்டனர். ஆற்றல் மிக்க படை மறவர்களாக விளங்கினர் எனக் கொள்ளலாம்,

அவர்களின் அரசியல் தொடர்பு, பழந்தமிழ்ப் பேரரசுகள் பல வற்றாலும் நாடிப் பெறப்பட்டன. கோசர் தொடர்பாகச், சங்க இலக்கியங்களில் கூறப்படும், செய்திகளும் நிகழ்ச்சிகளும், அவர்கள், கி. மு. மூன்றாம் நூற்றாண்டளவிலேயே, தமிழர்களாகி விட்டனர், தமிழ் நாட்டின் நிலைத்த குடியினராகி விட்டனர் என்ற உண்மைகளை உறுதி செய்கின்றன. இவ் விளக்கத்தின் அடிப்படையில் பார்த்தால், கோசர் குடியேற்றம், கி. மு. நான்காம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்தே, ஏன் அதற்கும் முந்திய காலத்தே நடைபெற்றிருக்க வேண்டும் எனக் கொள்ளலாம்.'[23]

ஆக, திருவாளர். வி. ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்களும், 'இவர்களைக் குஷானர் களாகக் கொள்வது இயலாது'[24] எனத் தொடங்கி, இடையில்,' கி. மு. மூன்றாம் நூற்றாண்டில், அவர்கள் தமிழர்களாகவே ஆகிவிட்

டனர்'[25] என முடித்தார், என்றாலும், இறுதியில் 'கோசரின் குடியேற்றம், கி. மு. நான்காம் நூற்றாண்டிற்கும், அல்லது அதற்கும் முற்பட்ட காலத்தும் நிகழ்ந்திருக்க வேண்டும்'[26] என முடித்திருப்பதன் மூலம், கோசர் யாவர் தமிழ் மண்ணின் மைந்தரா? வந்தேறிகளா என்பதில் தமக்கும் தெளிவு இல்லை என்பதையே காட்டிச்சென்றுள்ளார்.

திருவாளர். டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் கருத்து :

மேதகு ஆசிய சங்கத்தின் வெளியீடு (Journal of Royal Asiatic Society) 1923 ஆம் ஆண்டு இதழில், திருவாளர் டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் பின் வருமாறு கூறியுள்ளார்.

'இவர்கள் (கோசர்) இராமாயணத்தில் வரும் 'கோசகோசர்' (Kosakaras) போலும், ஒரு பழங்குடியினர் ஆதல் கூடும். முத்ராராக்ஷஸா என்ற நாடகம் கூறுமாறு சந்திரகுப்தன் சார்பாக, பாடலிபுத்ரம் வரை படையெடுத்துச் சென்ற காசர் (Khasar) என்ற பழங்குடியினர் இவராதல் கூடும். மனுவின் படி [10:20-22] இவர்கள் 'க்ஷத்ரிய விராடர்கள்' ஆவர். உசானர் கூற்றுப்படி, நீர் ஊற்றுகளில், தண்ணீர் எடுப்ப வரும், தண்ணீர் பங்கிடுபவரும் ஆவர்'[27]

திருவாளர். எஸ். கே. அய்யங்கார் அவர்களின் இக் கருத்தை, திருவாளர் வி. ஆர் ஆர். தீக்ஷிதர் அவர்கள் ஏற்க வில்லை. 'கோசகாரா என்பது,இன்றைய அஸ்ஸாம் மாநிலத்தைக் குறிப்பதாகும். பண்டைய அஸ்ஸாம் நாட்டிலிருந்து மக்கள் தமிழகத்திற்கு வந்து குடியேறினர் என்பது நம்பக் கூடியதன்று. ஒரு கட்டுக்கதை'[28] எனக் கூறி மறுத்துள்ளார்.

திருவாளர். என். சுப்பிரமணியம் அவர்கள் கருத்து :

சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, [Journal of the Madras University] ஜூலை 1961 இதழில் சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத்துறை பேராசிரியராக விளங்கிய திருவாளர். என். சுப்பிரமணியன் அவர்கள் பின் வருமாறு எழுதியுள்ளார்.

'சொன்ன சொல் தவறா வாய்மைக்கும், வீரத்திற்கும் பாராட்டப் பெறும் கோசர், அசோகன் பாறைக் கல்வெட்டு சத்யபுத்ரராகக் கருதப்படுகின்றனர். இக் கருத்து மூன்று உண்மைகளை அடிப்படையாகக் கொண்டுளது.

1] சத்தியபுத்ரர் என்ற சொல், பாலி மொழியின் சத்யபுதர் என்பதன் சொற் சிதைவு.

2] அது, உண்மையே வழங்கும் மக்கள் எனும் பொருளுடையது.

3] கோசர்,பொதுவாக உண்மையே விரும்பும் மக்கள்

இக்கருத்து ஏற்புடையதாக இருந்தாலும், இதுபெரும்பாலான வரலாற்று ஆசிரியர்களால் ஏற்றுக்கொள்ளப்படுவது இல்லை. டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள், சத்ய புத்ரர்களை மலபார் நாட்டு நாயர்களாகக் கருதுகிறார். இந்த வாதம் வலுவற்றது; ஏற்க இயலாதது

சத்யபுத்ரர்களை காஞ்சி மக்களாக அடையாளம் காணும் திரு. எஸ். வி. வெங்கிடேஸ்வரன் அவர்களின் கணிப்பு, காஞ்சி சத்யவாத நாடு என அழைக்கப்படுவதை அடிப்படையாகக் கொண்டுளது இது, வெறும் பெயர்

ஒற்றுமையாம் வலுவிலாச் சான்றினை அடிப்படையாகக் கொண்டுளது ஆகவே, இக் கருத்தும் ஏற்புடையதன்று.

சத்தியபுத்திர நாட்டைப் பூனாவுக்கு அணித்தாகக் கொள்ளும் திருவாளர் பந்தர்கார் அவர்கள் கருத்தும் ஏற்புடையதன்று திருவாளர் வி. ஏ. ஸ்மித் அவர்கள் மகாராட்டிரம் மௌரியப் பேரரசின் ஒரு பகுதியாகவே இருந்தது; சத்யபுத்ரர், அசோகனுக்கு அடங்கா அரசாகவே இருந்தது என்ற காரணம் காட்டி, அக் கருத்தை அறவே மறுத்துள்ளார்'[29]

தொடர்ந்து, கோசர் பற்றிய கருத்துக்களைத் தொகுத்து எழுதியுள்ள திருவாளர் என். சுப்பிரமணியம் அவர்கள்[30] திருவாளர். வி. ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர் கருத்து இது திருவாளர் கே ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருத்து இது; திருவாளர் பி. ஏ. சலேடர் [Saletore] கருத்து இது; எனப் பிறர் கருத்துக்களை எடுத்துக் கூறியும் அவற்றுள் இன்னார் கருத்து, இன்ன காரணத்தால் ஏற்புடையது. இன்னார் கருத்து, இன்ன காரணத்தால் ஏற்புடையதாகாது எனக் கூறியும் தான் சென்றுள்ளாரே அல்லது தம்முடைய கருத்து இதுதான் எனத் தெளிவாகக் கூறவில்லை.

முடிவுரை :

ஆக, இதுவரை எடுத்து வைத்த விரிவான விளக்கங்களிலிருந்தும், கோசர் யார் என்ற திட்ட வட்டமான முடிவிற்கு வர வரலாற்று ஆசிரியர்களால் இயலவில்லை என்பதே தெளிகிறது;

குசர் வழி வந்தவர்; குஷானர் வழி வந்தவர் பாபிலோனிய யவனர், இராமாயணக் கோசக்காரர்,

மலபார் நாயர், கொண்கான நாட்டவர், காஞ்சி நாட்டவர் பூனாவை அடுத்து இருந்தவர் என்றெல்லாம் கூறி வரலாற்றுப் பேராசிரியர்கள் பலரும் குழம்பியுள்ளனர், குழப்பியுள்ளனரே அல்லது கோசர் யார் என்ற தெளிவான முடிவுக்கு ஒருவரும் வந்தவர் அல்லர் எப்போது வரு வாரோ அறியேம்.

கோசர் முடிவும் அத்தகையதே, அன்னி மிஞிலியின் தந்தையின் கண்களை அவித்தமையால் அழுந்தூர்த் திதி யனால் அழிவுண்ட பின்னர், ஊர் முது கோசர், வரலாற்றி லிருந்து மறைந்தே போயினர்.

கொங்கில் கண்ணகிக்குக் கோயில் எடுத்து வழிபா டாற்றிய பின்னர், இளங்கோசர்களும் வரலாற்றில் இல்லா மலே போய் விட்டனர்.

கோசர் தலைவன் பழையன் மாறனும், அறுகை காரணமாகச் செங்குட்டுவனால் வெற்றி கொண்ட பின்னர் வரலாற்றிலிருந்துமறைந்தே போனான்.

ஆக தமிழக வரலாற்றில் பெரியதோர் இடம் பெற்றி ருந்த எண்ணிலாப் புலவர்களின் எண்ணிலாப்பாடல்களில் இடம் பெற்று பெரிய தொரு அரசியல் சூறாவளியையே சுழலவிட்ட கோசர்களின் தோற்றமும் தெளிவாக இல்லை ஒடுக்கமும் தெளிவாக இல்லை, ஆதி அந்தம் அறியாப் பெருநிலையினராகி விட்டனர் கோசர்.

# சான்றெண் விளக்கம்

1. புலவர். கா. கோவிந்தன்-'திரையன் முதலிய 29 பேர்கள்' 1955, பக்-109
2. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பக்-47-48
3. மேலது பக்-55 58
4 S. I. I. Vol. V No. 418
5. புதுக்கோட்டை சாசனம் நெ, 163
6 S. I. I. Vol. IV No. 391
7 S. I. I. Vol. V No. 700
8 EPI – Report 1917 No. 633
9. ரா. இராகவையங்கார், கோசர், 1951, பக்-57
10. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, சேர மன்னர் வரலாறு பக்-128-30
11. அ. கிருட்டிணசாமி, தமிழ்நாட்டு வரலாறு-சங்ககாலம் அரசியல்' 'கொங்கர்' — பக்-415.
12. மேலது பக்-415
13 V. A. Smith, Early History of India, P. 185 F. N.
14 V Ramachandra Dikshitar, Indian Culture–The Kosar Their place in South Indian History
15 K. A. Nilakanta Sastri–Comprehensive History of India, Vol-II P–500
16 N. Subramaniyam, Madras University Journal, Vol-XXXIII, Jan, 1962, P-150
17 C. E. Ramachandran, Ahananuru in its Historical Setting, 1974. P. 51–52

"The identification of the Kosar has been a much debated problem. While scholars like V. A. Smith and V. R. Ramachandra Dikshitar, identified the Kosar with the Sathuyaputas or Satyaputras of the Asokan Edicts, Prof. K. A. Neelakanda Sastri is now inclined to think that the two were different from one another and agree with Prof. Burrow, that the Satyaputras could be derived from the Adiyamans. Dr. N. Subramaniyam discusses the various views regarding the identification of the Kosar and concludes that the identification of the Kosar with Satiyaputras" would appear to be a valid identification, in so far as the present evidences goes"

18 Vincent A. Smith, Early History of India-P-185' The Satiyaputra country may be identified with the small region where the Tulu Language is spoken, of which Mangalore is the centre'

19 Ante-1912-231 "Brahmana Immigration into Southern India"

"An observation of Mr. A. G. Swamin seems to give a clue to the name satiyaputra. He states that one division of Tamil Brahmins, known as 'Brihat-Charana or the great immigrations, is subdivided into Maghadanadu and Molagu sections, the Mahadanadu being again subdivided into Kandra-Manikkam, Mangudi and Sathiyamangalam, etc., all villages along the western Ghats. The Immigrants, he thinks natuarally would have clung to the highlands and people the skirts of the present province of Mysore, the

district of Malabar, Coimbatore and Madura, and spread out towards the west coast''

20 Vincent-Smith, Early History of India, P 185
'I think that the Satyaputra of Asoka may be the Same as the Sathiyamangalam. I cannot agree with Prof. Bandarkar, that the Sathiyaputra kingdam should be placed in the Ghats near Poona. It was clearly a Tamil realm and I believe my identification to be correct'

21 V. R. Ramachandra Dikshitar-Kosar - Their place in South Indian History, Indian Culture.
vol : I Nos : 1. 4, July 1934 April 1935 pp 97-102

22 V. Kanakasabai-Tamils - 1800 years ago, p-81

23 V. R. Ramachandra Dikshitar OP Cit PP 97-102
'The question whether the Kosar were an indigenous tribe or alien to Tamil Land, still engages the attention of the serious historians of South India. There is no good evidence to support the theory that they were foreigners to the Tamil Kingdom proper. Various conjectures have been made to identify them. The late V. Kanakasabai wrote, 'The Kosar appear to be no other than the Kushans, a branch of whome conquired Bactria in the Second Century B. C. They were the leaders of four tribes of the 'Yuh-Chi'

According to the same writer, they were immigrants to the Tamil country' and the immigration took place

some time in the first or second century B. C. It would then appear, that these Kosar were not natives of the soil. They were outsiders, who settled in large numbers in Malabar ccast to the ncrth of the arc ert Cera kingdom.

It is rather difficult to Identify them with Kushans. It generally accepted by scholars, that there was a Mauryan invasion of South India and that before the reign of Asoka. In the light of this and for reasons to pe shown in the squal we have to take it, that. In Third Century B. C. or evenbefore, these Kosar settled down, acquired diplcmatic alliance, was sought by the three ancient Tamil Kingdoms.

These events and the incidents narrated in the sangam literature in connection with the Kosar lend support to the fact, that by the Third Century B. C. they had become Tamilized and were quite at home in the Tamil country.

In the light of this fact we had to take it that the immigration of the Kosar must be looked for in the fourth century B. C. or even earlier.

24 Ibid,
'rather difficult to identify them with the Kushans

25 Ibid
'By the third century B. C. they had become Tamilized...'

26 Ibid
'The immigration of the Kosar must be looked for in the Fourth Century B. C. or even earlier'

27 S. Krishnasami Aiyangar, Journal & Royal Asiatic Society, 1923, P-611

'These (Kosars) may be a tribe of people, the same as the Kosakaras of the Ramayana and it is possible that they were the Khasas, who led the advance part of the army that marched upon Padaliputra in favour of Chandra Gupta, according to the drama Mudrarakshasa. According to Manu (10;220-22) these were Kshatria bratas, who according to Usanas were water carriers and distributors of water at fountains.'

28 V. Ramachandra Dikshitar, 'Kosar–Their place in South Indian History' Indian Culture Vol. 1 No. I–4, July 1934 April 1935 P. 98

'It may be that the Kingdom of the Kosakaras represented the Modern Assam. It is plausible that a family of people emigrated from the ancient Assam to South India.

29 N. Subramaniam, Journal of the Madras University, Vol XXXIII, No. 1 July 1961, P 149
'These Kosars, described invariably as loyal to the plighted word, and of heroic qualities, have been identified with the Satyaputras of Asokan edicts. This identification is based on the fact that

1 The expression 'Satiyaputras is but a Pali corruption of •Satyaputras' that

2 it means, 'Children of the truthful ones' and that

3 the Kosar are invariably referred to as the truth loving ones.

This identification, though reasonable, has not been accepted by some scholars.

Dr. S. Krishnasamy Ayyangar identified the Satya–putras with the Nayars of Malabar on the ground that the former means, 'sons of the chaste women. This argument is papable farfetched.

S.V. Venkateswara's identification of the Satyapu--tra with the people of Kanchi area is based on the slender ground that Kanchi was called as Satyavara tha country. This is untenable, as it is based on incidental similarity in names.

R. G. Bhandarkar's location of Satyaputra near Poona, rightly rejected by V. A. Smith, is equally untenable for the Maharastra region formed part of the Mauryan empire and Asoka speaks of the Satiya-putas as independent Southern region'

30 Ibid, P-150



# கருவி நூற் பட்டியல்

## இலக்கியங்கள் :


1 அகநானூறு

2 ஐங்குறு நூறு

3 களவழி நாற்பது

4 குறுந் தொகை

5 சிலப்பதிகாரம்

6 தொல்காப்பியம்

7 திருக்குறள்

8 நற்றிணை

9 பதிற்றுப் பத்து

10 புறநானூறு

11 பெரும்பாணாற்றுப்படை

12 மதுரைக் காஞ்சி

13 மலைபடு கடாம்


## தமிழ்


1 இராகவையங்கார் மு. கலைகள், 1932

2 இராகவைய்யங்காரர் ரா.: கோசர், ஓர் சிற்றாராய்ச்சி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1951

3 இராமமாணிக்கம்பிள்ளை மா. சோழர் வரலாறு ; சென்னை 1959

4. இராமச்சந்திரன் சி. ஈ.: அடிப்படைச்சான்றுகள்–1 தமிழ்நாட்டு வரலாறு, சங்க காலம்-அரசியல், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் 1983.

5 இராமச்சந்திரன் செட்டியார் கோ. மா. கொங்கு நாட்டு வரலாறு அண்ணாமலைப்பல்கலைக் கழகம் 1954

6 கிருட்டிணசாமிஅ. 'கொங்கர்' தமிழ் நாட்டு வரலாறு, சங்க காலம், அரசியல் தமிழ்நாட்டுப்பாடநூல் நிறுவனம் 1983.

7 கோவிந்தன் புலவர் கா.: தமிழகத்தில் கோசர்கள் அருணா பப்ளிகேஷன்ஸ் 1960, திரையன் முதலிய 29 பேர்கள் சங்க கால அரசர் வரிசை–6 தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், 1955 கோசர் செந்தமிழ் செல்வி

1952-53, கோசர்-காவிரி கட்டுரைத் தொகுப்பு எழிலகம், 1990 தமிழர் வரலாறு, கழகம் 1989.

8 சுப்பிரமணியம் பொன்.: 'காலக் கணிப்பு' தமிழ் நாட்டு வரலாறு சங்க காலம், அரசியல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1983

9 திருநாவுக்கரசு க. தா. 'குறுநில மன்னர்கள்; தமிழ் நாட்டு வரலாறு-சங்ககாலம் –அரசியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1983

10 துரைசாமிப் பிள்ளை, ஔவை. சு. சேர மன்னர் வரலாறு, சாந்தி நூலகம், சென்னை–1960.

11 பிள்ளை கே. கே. 'தமிழகமும், மோரியர், படையெடுப்பும்' டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் வெள்ளி விழா மலர்–1967.

12 கரந்தைக் கவியரசு. வேங்கடாசலம் பிள்ளை ரா.

13 நாவலர். வேங்கடசாமி நாட்டார் ந. மு. அகநானூறு விளக்கவுரை பாகனேரி த. வை. இளைஞர் தமிழ்ச்சங்கம், 1943.

14 வேங்கடசாமி மயிலை. சீனி,
'சேரர்'
'சோழர்'
'பாண்டியர்'
'இலங்கையில் தமிழர்'
தமிழ்நாட்டு வரலாறு-
சங்க காலம்-அரசியல்,
தமிழ்நாட்டுப் பாடநூல்
நிறுவனம், 1983.

## English:

1. Arokiyasami M. Classical Age of the Tamils, University of Madras. 1967.

2. Kanagasabai : Tamils 1800 years Ago, Kazhagam, 1960

3. Krishnaswamy Ayyengar S. : Journal of Royal Asiatic Society, 1923

4. Nilakanta Sastri K.A. ; Age of the Nandas and Mauriyas, Motilal Publi cations, 1951.
A History of South India From Pre-Historic Times to the fall of Vijayanagar, Oxford University Press, 1955
The Colas-Vol I-University of Madras, 1935.

5. Ramachandran C.E.: Ahananuru in its Historical setting, Madras University Publications, 1974.

6. Ramachandra Dikshitar V.R.: 'The Kosar-Their Place in South Indian History' Indian Culture 1934-35

7. Smith V.A.: Early History of India from 600 B.C. to the Muhammadan conquest (London) Oxford-1908.

8. Srinivasa Iyengar P.T.: History of the Tamils from the Earliest Time to 600 A.D. (New Delhi) AES-1982

9. Subramaniam N.: Sangam Polity Asia Publishing Home, Bombay - 1966
History of Tamil Nadu upto 1565 A.D -Kudal Publishers, Madurai-1972

10. Subramaniam N. Journal of the Madras University, 1962

கல்வெட்டுத்தொகுப்பு நூல்கள்

1. Annual Reports on Epigraphy.

2. Epigraphia Indical

3. South Indian inscriptions.

4. Topographical List of South Indian Inscriptions.

5. புதுக்கோட்டை சாசனம்.

## இதழ்கள்

1. கலைமகள்

1. செந்தமிழ்ச் செல்வி

3. ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களின் வெள்ளி விழா மலர், 1967.

4. Journal of the Madras University

5. Journal of Royal Asiatic Society

6. Indian Culture.



## தமிழக வரலாறு - கோசர்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| iv | 6 | தொடரும் | ஓரளவேனும் முற்றுப்பெறும் |
| vi | 13 | Epigraphic | Epigraphia |
| | 17 | indian | Indian |
| 1 | 25 | மதுரைக்காஞ்சி | மதுரைக்காஞ்சி[1] |
| 2 | 10 | அவர்கு | அவர்க்கு |
| | 12 | ஆம்பலத்து | ஆலம்பலத்து |
| | 16 | வந்தபோது, வந்தபோது | வந்தபோது |
| | 20 | ஆலம்பயத்து | ஆலம்பலத்து |
| | 25 | கூறியுள்ளார் | கூறியுள்ளார்[2] |
| 3 | 1 | காலம்'' | காலம்''[3] |
| | 9 | மேற்கொண்டனர் | மேற்கொண்டனர்[4] |
| | 13 | பங்குகொண்டனர் | பங்குகொண்டனர்[5] |
| | 18 | வரலாறு'' | வரலாறு''[6] |
| | 25 | கூடும்'' | கூடும்''[7] |
| 4 | 6 | வந்தனர் | வந்தனர்[8] |
| | 17 | தெரிந்திலது | தெரிந்திலது[9] |
| | 24 | மதுரைக்காஞ்சி | மதுரைக்காஞ்சி[10] |
| | 26 | போலும் | போலும்[11] |
| 8 | 22 | வேண்டும்'' | வேண்டும்''[20] |
| 9 | 6 | கழக் | கழக |
| | 18 | வந்தனர்[21] | வந்தனர் |
| 12 | 14 | தலையாளங்கானத்து | தலையாலங்கானத்து |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 4 | Mowriyas | Mauryas |
| | 13 | expeditior | expedition |
| | 22 | 8 பக்-457 | |
| | 23 | காவிரி–கட்டுரைத்தொகுதி,1990<br>பக் 153 | |
| | 24 | 9 வரிகள் 771-774 | |
| 17 | 1 | செந்தமிழ்ச்செல்வி, 1952-53,<br>பக் 458 | தவிர்க்க |
| | 2 | காவிரி-கட்டுரைத்தொகுதி-1990,<br>பக் 153 | |
| | 6 | Mawryas | Mauryas |
| | 7 | forcs | forces |
| | 13 | Mowryan | Mauryan |
| | 15 | Koser | Kosar |
| | 16 | Mowryas | Mauryas |
| | 17 | Mawryas | Mauryas |
| 18 | 11 | Stanz | Stanza |
| | 16 | Stanze | Stanza |
| | 25 | குருந்தொகை | குறுந்தொகை |
| 24 | 4 | கூறியுள்ளார் | கூறியுள்ளார்[11] |
| 25 | 5 | அகநானூறு | அகநானூறு[15] |
| 27 | 1 | Brhadrabahu | Bhadrabahu |
| | 2 | follow | fellow |
| | 10 | தமிழ் வரலாறு | தமிழர் வரலாறு |
| 29 | 16 | வத்த | வந்த |
| | 20 | 15 | 175 |
| 21 | 17 | ஏற்ல | ஏற்ற |
| 33 | 16 | குநிப்ப | குறிப்ப |
| | 18 | பாட்டும் | பாட்டும்[11] |
| | 25 | உண்டாக்சியது | உண்டாக்கியது |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 35 | 5 | கொற்றனர் | கொற்றனார் |
| 36 | 6 | உளா | உளர் |
| 37 | 6 | பாண்யன் | பாண்டியன் |
| 38 | 5 | சா ஆய்க் | சா அய்க் |
| | 11 | பற்றில | பற்றிய |
| 39 | 20 | அடியேன | அடியேன் |
| 44 | 3 | ஆகையால் | ஆசையால் |
| | 15 | அந் | அந் நூலின் |
| 49 | 16 | முகாளது | கொளல் |
| 51 | 9 | தலையாளங்கானத்து | தலையாலங்கானத்து |
| 54 | 9 | பாட்டுடை தலைவன் | பாட்டுடைத்தலைவன் |
| 55 | 23 | போாகளத்திலேயே | போர்க்களத்திலேயே |
| | 14 | குன்னூர் | குன்றூர் |
| 57. | 4 | 2 பக்கம் | 2 பக்கம் 112–113 |
| 58 | 1 | Kodari | Kodai |
| 59 | 7 | வேண்டுபுலத்து | வேறுபுலத்து |
| | 14 | வேண்டுபுலத்து | வேறுபுலத்து |
| | 15 | சா ஆய்க் | சா அய்க் |
| 60 | 10 | பொருப்பினை | பொறுப்பினை |
| 61 | 17 | பொறுட்டு | பொருட்டு |
| | 29 | துயதுர்டைத்து | துயர் துடைத்து |
| 64 | 5 | வைந்தார் | பைந்தார் |
| 69 | 22 | செப்பாவை | செய்பாவை |
| 74 | 2 | திதியின் | திதியன் |
| | 7 | மிஞீலி | மிஞிலி |
| 75 | 11 | குறுப்பியன் | குறும்பியன் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 78 | 13 | போலத்தேர் | பொலந்தேர் |
| 84 | 24 | நிகழ்க்சி | நிகழ்ச்சி |
| | 26 | அரியனை | அரியணை |
| 89 | 5 | வாணிய | வாணிப |
| | 20 | ஊனூர் | ஊணூர் |
| | 28 | வாட்போல் | வாட்போர் |
| 90 | 19 | மருர்கூர் | மருங்கூர் |
| 91 | 3 | மரவினன் | மரபினன் |
| | 9 | விளக்கியுள்ளேன் | விளக்கியுள்ளேன்[6] |
| 92 | 14 | வார்த்திகனுக்குய | வார்த்திகனுக்கும் |
| 98 | 17 | நியமப் | நியமம் |
| 99 | 2 | என்பவர் | என்பர் |
| | 16 | ஒழினி | எழினி |
| 101 | 24 | தோன்றான் | தோற்றான் |
| 102 | 18 | அகம் 216 | குறிப்பிட்ட அகம் 216 |
| 107 | 22 | அதன ல் | அதனால் |
| 109 | 13 | பகைவம் | பகைவர் |
| 114 | 2 | உறையூர், ஏணிச்சேரி | உறையூர் ஏணிச்சேரி |
| 120 | 1 | பாடலை[38] | பாடலை[31] |
| | 13 | அகப்பாட்டில்[34] | அகப்பாட்டில் |
| 124 | 30 | | 35 அகம் 220 |
| 126 | 15 | இரும்மிடம் | இரும்பிடம் |
| 138 | 14 | கூறியுள்ளார்[8] | கூறியுள்ளார்[9] |
| 140 | 14 | நெடுந்நகர் | நெடுநகர் |
| 142 | 9 | அவனுமை | அவனுடன் |
| 144 | 13 | இல்லை | இல்லை[2] |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 144 | 16 | குடகுப்புறத்து | குடகப்புறத்து |
| | 20 | குடக புறத்து | குடகப் புறத்து |
| | 26 | அவர்கள் காரணம் | அவர்கள் கூறும்காரணம் |
| 149 | 20 | தவராது | தவறாது |
| 150 | 4 | நாரில் | நரிற் |
| | 14 | நாலூர்களைப் | நால்வர் நாலூர்களைப் |
| 151 | 19 | பாணாதிராயன் | பாணாதிராயன்[7] |
| 154 | 21 | மேற்கூறய்பெற்ற | மேற்கூறப்பெற்ற |
| | 25 | Historiyans | Historians |
| 157 | 14 | பெரிய | பெரிய நாடோடிக்கும்பல் |
| | 24 | பரவலாயினர்[19] | பரவலாயினர்[19] என அவர் நினைப்பதாக நான் கருதுகின்றேன் |
| | 25 | தொடர்ந்து அசோகன் | அசோகன் |
| 163 | 12 | பெற்றிருந்த | பெற்றிருந்த, |
| 165 | 5 | Neelakanda | Neelakanta |
| | 11 | Satiyaputras | Satyaputras |
| 166 | 22 | Whome | Whom |
| | 22 | Conquired | Conquered |
| 167 | 6 | idcntity | identity |
| | 7 | It generally | It is generally |
| | 10 | to pe | to be |
| 168 | 9 | Padaliputra | Pataliputra |



## எழிலகம்

46, செல்வ விநாயகர் கோயில் தெரு
திருவத்திபுரம்-604 407

ISBN-81-85703-14-0

M. K. Color Process, Madras-600 014 Phone: 841478